ஒன்பதாவது தசையில், உடம்பு முழுமையும், சுருக்க முள்ளதாம். மிருதுவான ஆஹாரத்தையே தின்னும். ஸங்கடமான இடங்களுக்குப் போகாது. தந்தரோக முள்ளதாம். ஆசை, பயம், கோபம், இவைகளாலோ, அடித்துத் தொந்தரவு செய்வதாலோ, வேகமாகப்போகாது.

பத்தாவது தசையில், குதிகால் நழுவி, உயரத் தூக்கவும், தோளில் சுமக்கவும், சக்தியற்று, சிறிது ஆஹாரமே செய்யும். ஆண்குறி எழாது. தலைமயிர், கண், கால்களின் ஸந்திகள், வால், இவைகள் வெலவெலத்திருக்கும். அடிக்கடி மலஜலம் விடும். இவைகள் நூறுவயதுஆன யானையின், லக்ஷணங்களாகும்.

பதினோராவது தசையில், சுருக்கங்கள் விழுந்து, மயிர் உதிர்ந்துவிடும். கோசத்திலேயே, மூத்திரம் வழியும். செயல் குன்றிவிடும். அது நன்கு போஷிக்கப்பட்டிருப்பின், மயிர் அடர்ந்து அதிக சோபையுடையதாக இருக்கும்.

பெரிய காதுகளும், மத்தகமும், உடைய யானை, நூறு வருடம் பிழைத்திருக்கும். முகம், எலும்பு, மூக்குத்தண்டு, ஸந்திகள் இவைகளில் காயமுற்று, அறுவறுக்கத்தக்கதாக இருக்கும்.

பதினோராவது தசையை அடைந்த யானைக்கு, "பூர்வகம்" என்று பெயர்.

பன்னிரண்டாவது தசையை அடைந்த யானை, மிகுந்த அமைதியும், நிலைபெற்ற மனமும், நீண்ட விரலுடைய துதிக்கையும், உடையதாம்.

இவ்விதம், யானைகள், நூற்றுஇருபது வருஷங்கள் ஜீவித்திருக்கும். பன்னிரண்டாவது தசையில், எதற்கும் உபயோகப்படமாட்டாது.

இவ் விலக்கணங்களை அரசன் அறிந்திருக்கவேண்டும்.

மற்ெருரு நூலில் கூறப்பட்டது —

[இதிலுள்ள விசேஷங்கள் மட்டிலும் இங்கு குறிக்கப் பட்டிருக்கின்றன.]

ஐந்துமாதக்குட்டி, ஆனைவணங்கி, கருங்காலி, கோங்கு, இவைகளின் தளிர்களைத்தின்னும். முகமும், கும்பமும், வட்டவடிவமாக இருக்கும்.

ஒன்பதுமாதக்குட்டி அதிகமாகத் தூங்கும்.

பத்துமாதக் குட்டி, அடிக்கடி பால் குடிக்கும்.

பன்னிரண்டு மாதக் குட்டிக்கு, நகங்களின் இடுக்குகள், எப்பொழுதும் நனைந்திருக்கும்.

மூன்று வயதுக் குட்டிக்கு, "அபஸர்பம்" என்று பெயர்.

நான்கு முதல், பத்து வயது வரையில் முறையே, பர்பரம், கலபம், வைகாரிகம், சிசு, அஞ்சனம், பிரபவம், விக்கம் என்று பெயர்.

நான்காவது தசை முதல் பதினோராவது தசை வரையில் முறையே, கல்யாணம், யூதம், நிஸ்ருததந்தம், விவர்ணகம் விரவீ, புராணம், ஸ்தவிரம், பூர்வகம் என்று பெயர்.

மற்றுமோர் நூலிலுள்ளது — [இதிலும், விசேஷங்கள் மட்டிலும், குறிக்கப்பட்டிருக்கின்றன.]

இரண்டு வயதுக் குட்டிக்கு, நகங்கள், சிறிதளவு நெருக்கமாக இருக்கும். காரணமின்றி ஸந்தோஷமடையும. அடிக்கடி கண்ணை மூடிக்கொள்ளும். கீழ்ப்பார்வையுள்ளதாக இருக்கும். நாள்பட்ட ஜலத்தைக் குடிக்கும். அதிகமாக வருந்தும். இதற்கு, "சூலிகம்" என்று பெயர்.

நான்காவது வயதில், பருத்த முழங்காலும், மடிந்த ஆண்குறியுமுடையதாம். வெண்மையான புள்ளிகளுடையதாக இருக்கும். இதற்கு "பர்பரம்" என்று பெயர்.

ஐந்தாவது வயதில், கட்டை, பட்டை, புல், பூண்டு, முதலியவைகளைத் தின்னும். இதற்கு, "கலபம்" என்று பெயர்.

ஏழுவயதுக் குட்டிக்கு, துதிக்கை சுருக்கமுள்ளதாகவும், மண்டை பெரியதாகவும் இருக்கும். தந்தத்தால் குழிபறிக்கும். அரிப்புள்ளதாம். வேகமாகப் போகும்பொழுதே லத்தி போடும். இதற்கு, "சிசு" என்று பெயர்.

எட்டுவயதுக் குட்டி, மிருதுவான ஆண்குறியை அடிக்கடி அடித்துக்கொள்ளும். இதற்கு, "அஞ்சநாமம்" என்று பெயர்.

ஒன்பதாவது வயதில், தெளிந்த பார்வையும், அகன்ற மார்பும், மஞ்சள் சிவப்பான தந்தமும், மனதைக்கவரும் சோபையுமுடையதாகவும், இருக்கும். பிடியின்மீது ஏறும். அழுத்தமாகப் புணரும். ஆயினும் வீரியம் வெளிப்படாது. இதற்கு, "பிரபவம்" என்று பெயர்.

பத்துவயது யானை, சண்டைக்கு ஓர் எடுத்துக் காட்டாக இருக்கும். இதற்கு "விக்கம்" என்று பெயர்.

இரண்டாவது தசையில், யானை, சண்டை செய்யத் துடிக்கும். துதிக்கையில் நீர் சிந்தும், கர்போத்பத்தி செய்யும் திறனுடையதாகும். ஸங்கடமான இடங்களில் அலட்சியமாக ஏறிச்செல்லும். ஆண்குறி பருத்திருக்கும். தந்தங்கள், மஞ்சளாகவும், உள்நாக்கும், தொப்பிளும், வெளுப்பாகவும், இடுப்பும், குஹ்யமும், வட்டமாகவும், சரவேகபராக்கிரமமும், சிறந்த பலமும், உடையதாகவும் இருக்கும். இதற்கு "போதம்" என்று பெயர்.

மூன்றாவது தசையில், யானைக்குரியஸம்பூர்ணபலம் பெற்று, சிறந்த புத்திஸாமர்த்தியமும், சுறுசுறுப்பும் உள்ளதாய், கஜேந்திரனாய் விளங்கும். இதற்கு, "கூலங்கஷம்" என்று பெயர். அங்கங்கள், உரிய அளவுடனமைந்திருக்கும். துதிக்கை மதகந்தமுடையதாய். ஸகல குணங்களும்

பொருந்தி, சண்டையில் நிகரற்றதாக இருக்கும். பார்த்துத் திகட்டாத அழகும், அன்பு நிறைந்த அலக்ஷியமான பார்வையுடையதாம். உயரத்திற்கேற்ற பருமனும், பகையைக் கொல்லும் ஆற்றலும், தாது ஸாமியமும் பெற்று, குற்றமற்ற உடலும் உடையதாக இருக்கும். இதற்கு "ஜவனம்" என்று பெயர்.

நான்காவது நடையில், துதிக்கையை ஆட்டிக்கொண்டு, திருப்தியடையும், பகையிடம் வைரங்கொண்ட மனத்துடன் தூங்கும். தலைமயிர் செங்குத்தாக இருக்கும். கஜயூதத்திற்குத் தலைமை தாங்கும். இதற்கு, "கல்யாணம்" என்று பெயர்.

ஐந்தாவது நடையில், எதிர்செல்லுகிறவன் வார்த்தையை அனுஸரித்துச் செல்லும். நல்ல பாரம் சுமக்கும். பசி தாகம் தாங்கும். காமாதிரவிருத்தியுள்ளதாம். நிகரற்ற பலமுடையதாம். காதும், கடைக்கண்ணும் நெருங்கி இருக்கும். கன்னங்களில், எப்பொழுதும் மதம் வழியும், அதிகமாகத் தூங்கும். இதற்கு, "யூதம்" என்று பெயர்

ஆறாவது நடையில், பின்புறம், உதடு, காது, இமைகளில், மயிர் முளைத்திருக்கும். தந்தமூலம் நன்கு தெரியும். இதற்கு "நிஸ்ருததந்தம்" என்று பெயர்.

ஏழாவது நடையில், அக்கினி பலமும் பித்தமும் குறைந்து, வாதம் மேலிட்டு, அங்கங்கள் சோர்வுற்று, அழகு குன்றி, அங்கசேஷ்டைகள் குறைந்து, நிறம் குன்றி இருக்கும். இதற்கு "விவர்ணம்" என்று பெயர்.

எட்டாவது நடையில், தந்தமூலம் நழுவியிருக்கும், தந்தம் வளராது. கண்களில் நீர் நிரம்பி எப்பொழுதும் வடியும். துதிக்கையில் கபம் சிந்தும். புத்திசக்தி குறைந்து பயத்தால் யூதத்தைவிட்டு, வெளியே திரியும். பார்வை குன்றும். இதற்கு, "விரலீ" என்று பெயர்.

ஒன்பதாவது தசையில், முகத்தில், மயிர் அடர்ந்து, கண்கள் தொய்ந்து, கழுத்து நழுவி, பற்கள் ஆட்டங்கொண்டு. கூட்டத்தை வெறுத்து, யூதத்தின் பக்கத்தில் இருக்கும், மிருதுவான புற்களையே தின்னும். இதற்கு "புராணம்" என்று பெயர்.

பத்தாவது தசையில், மயிரும், பற்களும், உதிர்ந்துவிடும். சிரமப்பட்டு மூத்திரம் பெய்யும். வெறுப்படையும். மதம் சிந்திக்கொண்டே இருக்கும். தள்ளாடிக்கொண்டே மெது வாக சிறிதே நடக்கும்.

பதினோராவது தசையில், மாமிசங்கள் வற்றி இளைத்து, சரீரம் தள்ளாடும். அங்கங்கள் கரடுமுரடாக இருக்கும், கண்களில், படலம் படர்ந்திருக்கும். நரம்புகள் தெரியும், தாகமுள்ளதாம். பூச்சிப்புழுக்கள், நகங்களைத் தின்றிருக்கும். இதற்கு "விருத்தம்" என்று பெயர்.

பன்னிரண்டாவது தசையில், நன்றாகத் தூங்காது. தலாவிக்கொண்டே நடக்கும். உதவியை நாடும்.

ஆயுள், வயது, பிரஸவம், இவைகளை அறிவதில் முனிவரும் மயங்குகின்றனர். என்றால், மனிதனைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ.

யானைகளுக்கு, பத்து வயதுக்குமேல் இருபத்தினான்கு வயது வரையில், உத்தம வயதாம். அதற்குமேல், ஐம்பத்தாறு வயதுவரை மத்திம வயதாம். அதற்குமேல், எழுபது வயது வரை, அதமவயதாம். அதற்மேல் கிழத்தனமாம். (பத்து வயதுவரை, பாலியமாம்.)

யானைகளை முதல் வயதில் பழக்குவதிலும், நடுவயதில், சண்டையிலும், கடை வயதில், காரியங்களிலும் ஈடுபடுத்த வேண்டும்.

வைசம்பாயனர் கூறியது —

யானைகளுக்கு வயது நூத்தி இருபது. பத்திரஜாதி, ஸம்பூரண வயதும், மந்த ஜாதி, முக்கால் பங்கு வயதும்,

மிருகஜாதி, அரைப்பங்கு வயதும், ஜீவித்திருக்கும். ஸங்கீர்ணஜாதிகளின் வயதை, வேதவித்துக்களே அறிவர்.

மழை, ஆயுள், வயது, கர்பம், கலியாணம், இடி முழக்கம் இவைகளை, முனிவரே அறியார்கள். ஸாதாரணமான மனிதன் எவ்வாறு அறிய முடியும்.

பத்திரம், மந்தம், மிருகம், ஆகிய ஜாதி கஜங்களின் வயதையே, அறிய முடியவில்லை. ஆனாலும், யோகிகள். லக்ஷணங்களாலும், அறிகுறிகளாலும், பாகுபாடுகளாலும், ஸங்கீர்ண ஜாதிகஜங்களின் வயதையும், அறிவார்கள்.

சிறந்த புத்திஸாமர்த்தியம் படைத்தவர்கள், தேசபேதம், சுருக்கம், நிறம், பற்கள், சுபாவம், பலம், தந்தம், வேகம், உடலளவு, மயிர், காது, மணிகள், இவைகளை நன்கு கவனித்து உணர்ந்து, யானைகளின் வயதைக் கூறுகின்றனர்.

வேதமுணர்ந்த மேதாவிகள், யானைகளின் பிறப்பு, நடத்தை, வயது, இவைகளை அறிவார்கள். புத்தித்தடுமாற்ற முள்ள மற்றவர்கள், கூற முடியாது.

யானைகளின் வால், பத்து வயது வரையில், வயதுக்கு நான்கு அங்குலம் விதம் வளரும்.

முப்பது வயது வரையில், உடல் வளரும். நாற்பது வயது வரையில், தந்தமும் உடலும், பருத்து நீண்டு வளரும்.

யானைகளின், உத்தமாதி வயதை நிர்ணயிக்க, அவை களின் செயல்களையும், பலாபலத்தையும், அறியவேண்டும்.

இருபதுக்குமேல் நாற்பது வயது வரையில், உத்தம வயதாம். எழுபது வயது வரையில், மத்திம வயதாம். நூறு வயது வரையில், அதம வயதாம். அதற்குமேல் பயனற்றதாம். பாலியத்தில் இருபது வயது வரை, மதங் கொண்டிருக்கும். எல்லாக் காரியங்களுக்கும், உபயோக முள்ளதாம். யுத்தத்திற்கு மட்டிலும், பயனில்லை.

உத்தம வயதில், உத்தம பலமும், மத்திம வயதில், மத்திம பலமும், அதம வயதில், அதம பலமும், உடையதாம்.

முதல் தசையைவிட, மறு தசையும், அதைவிட அடுத்த தசையும், பலமும், வீரியமுமுள்ளதாம். இம்முறையிலேயே, மற்றவைகளையும் அறிதல் வேண்டும்.

கஜ வயோ லக்ஷணம் முற்றும்.

# தேசஜ கஜ லக்ஷணம்.

காம்போஜம், லாடம், ஸிந்து, வநாயுஜம், அங்கம், இவ்வைந்திடங்களிலுள்ள யானைகளுக்கு, மத்தகம், சரீரபாகங்கள், நகம், தந்தம், இவை வெளிர்நீலமாகவும், அங்கங்களும், வாலும், குட்டையாகவும், அண்டகோசம் மிருதுவாகவும் நீண்டுமிருக்கும். இவைகள் ரஜோகுணமுடையவைகளாம்.

அநூபம், வங்காளம், புளிந்தம், ஹரிணம், நேபாளம், அவந்தி, விதர்பம், இவ்வேழு தேசங்களிலுள்ள யானைகளுக்கு, அடிவயிறு, தந்தம், முகம், உடல், கண், இவைகள், சிவப்பாயிருக்கும். கபாதிக்கமும், வலிமையும், சாந்தமனதும், உடையவைகளாக இருக்கும்.

ஸௌராஷ்டிரம், கூர்ணிகம், கலிங்கம், யவநதம், வத்ஸம், காச்மீரம், இவ்வாறு தேசத்திய யானைகளுக்கு, முகம், கன்னம், மயிர், இவை வெளுப்பாக இருக்கும். வாதாதிக்க சரீரமும், தாமத குணமும், உடையதாம். மதகந்த சரீரமும், வெடித்த தந்தமும் நகமும் உடையதாம். இவைகள் ஸரயூநதி, மாளவதேசம், கோசரபர்வதம், அங்கம், மகதத்தின் வடபாகம், புண்ட்ரம், காச்மீரம், கோஸலம், பாஞ்சாலம், கலிங்கம், இந்த தேசங்களிலுள்ள மலைகளிலும், காடுகளிலும் ஸஞ்சரிக்கும். சில யானைகள், கங்கை கோமதி

நதி தீரத்திலும், ஸஞ்சரிக்கும். இவைகளின் கழுத்து, தலை, உதடு, முகம், தந்தம், வயிறு, துதிக்கை, கால்கள், முதுகெலும்பு, பிருஷ்டபாகம், இவைகள், பருத்து இருக்கும். மஞ்சள் நிறமும், இனியசப்தமும், கோபமின்மையும், அழகும், அக்கினிபலமும், உள்ளவைகளாகவும் இருக்கும்.

மத்ஸ்யம், பர்பரம், திரிகர்தம், மாளவம், இந்நான்கு தேசத்திய யானைகள், ஸிந்துநதியின் உபவனங்களிலுள்ள ஆஹாரங்களைப் புஜிக்கும். தாமஸகுணமுள்ளவைகள். கண், நகம், உடற்கூறு, துதிக்கை இவை மஞ்சளாகவும், தந்த முனையும், ஆண்குறியும் குட்டையாகவும், வெளுப்பாகவும் இருக்கும்.

ஸௌவீரம், பாஹ்லீகம், தசார்ணம், இம்மூன்று தேசங்களிலுள்ள யானைகள், கருங்காலியின் மணமுள்ளவைகள். மயிர், முகம், தந்தமூலம், இவை பொன்னிறமாயிருக்கும். கபாதிக்கத்தால், பிரகாசமான உடலுடையவைகள். மிகவும், கடுமையாக யுத்தம் செய்யும் ஆற்றலுள்ளவைகளாகவும் இருக்கும்.

கீர்வாணம், பாஹூகம், மராளம், தஹாரம் இந் நான்கு தேசத்திய யானைகள், வெடித்துச் சுருங்கிய நகமும், சிவந்த துதிக்கையும், மஞ்சள்நிற உடற்கூறுகளும் உள்ள விசித்திர சரீரமுடையவைகளாக இருக்கும்.

மத்ஸ்யம், கரஹாடகம், போடம், இம்மூன்று தேசத்திய யானைகள், எள்ளின் மணமும், நீண்ட துதிக்கையும் தந்தமும், மெல்லிய மயிரும், தீமையும் கபடமும் நிறைந்த மனமும் நடத்தையும், உடையதாம்.

கர்நாடகம், ஆந்திரம், மலையாளம், சகுந்தம், பாண்டியம், பாஸ்சாத்தியம், தௌலவகம், டங்கணம், கௌடம், இவ்வொன்பது தேசத்திலுள்ள யானைகளுக்கு, உடற்கூறுகள் நீலமாகவும், தந்தங்கள் வெண்மையாகவும், நகங்கள் சொத்தை விழுந்தும் இருக்கும். சிறந்த பராக்கிரமமுள்ள

வைகளாம். இவைகளை அறிஞர் பலவிதமாகக் கூறு கின்றனர்.

சைலாஹ்வயம், அஹிரளம், ஸஹியகம், சால்வலம், இந் நான்கு தேசத்திய யானைகளுக்கு, தந்தமுனை கூர்மையாகவும், உடம்பு சீதளமாகவும் மனோஹரமாகவும் இருக்கும். இவைகள் ஸாத்துவிக குணமும், நாவற்பழநிறமும், அழகிய தந்தங்களும் உடையவைகளாம்.

கேரளாந்த பூமியிலுள்ள யானைகள், புள்ளிகளாலழகிய முகமும் காதும், சிவந்து மனதைக் கவரும் கண்களும், மெல்லிய வெண்ணிறத் தந்தங்களும், மனோஹரமான உடலும் உடையவைகளாம்.

சஞ்சுமல்ல தேச யானைகள், வெண்மையான தந்தமும் நகமுமுடையவைகள்.

கார்ணகௌம தேச கஜங்கள், நீண்ட மயிர், பிளவுடைய தந்தமத்தியம், இளைத்த உடல், தானிருக்குமிடத்தில் சண்டை செய்யும் தைரியம், மதங்கொண்டகாலத்தில் தைரியமின்மை இவைகளுடையதாம்.

ஜலவர்ண கஜங்கள், சண்டையில், பயமுள்ளவைகளாக இருக்கும்.

குரு, சூரஸேநம், குகுரம், இந்த தேசத்திய யானைகள், மிருந்தவேகம், பலம், பராக்கிரமம், ரோஷம், தைரியம், நீண்டு கூர்மையான மயிர், இவைகளையுடையனவாம்.

ஜாங்கல தேச கஜங்கள், நீண்டு கூர்மையான மயிருடையவைகளாம்.

அநூபதேச கஜங்கள், குட்டையான உடலும், பருத்த ஆண்குறியும், பித்த தேகமும் உடையவைகளாம்.

தேசஜ கஜ லக்ஷணம் முற்றும்.

# கஜ கிரஹண விதி.

—o—

முதலில், யானையின் மூத்திரம், லத்தி, இவைகளை உடம்பில் பூசிக்கொண்டு, உடம்பைச் சேங்கொட்டைத் தழைகளால் மறைத்துக்கொண்டு, காடுகளில் சென்று, யானைகளின் அடிச்சுவடு, நாசமுற்ற மரங்கள், படுத்திருந்த அடையாளம், பீறிடும் சத்தம், இவைகளால், யானைகளிருக்கும் இடத்தை அறிந்துவரச் செய்யவேண்டுமென, வியாஸமுனிவர், கூறியுள்ளார்.

பிறகு, கிரீஷ்மகாலத்தில், தக்க பரிவாரங்கள், கருவிகளுடன், பழகிய பிடிகளிலும், குதிரைகளிலும் சென்று லக்ஷணமுள்ள யானைகளை, உபாயங்களால் பிடிக்கவேண்டும்.

யானைகளைப் பிடிப்பதற்கு, வாரிபந்தம், வசாபந்தம், அநுகதபந்தம், என மூன்று சிறந்த முறைகள், கூறப்பட்டிருக்கின்றன.

ஆபாதம், அவபாதம், என்ற இரு முறைகளாலும், தீமைகள் உண்டாவதால் அவைகளை, விட்டுவிட வேண்டும்.

ஜலாசயத்தையொட்டி, ஒரு குரோசம், அகலம் நீளமுள்ள பூமியைச் சுற்றிலும், யானைகள் போய் வருவதற்கு மட்டிலும் பாதை விட்டுவிட்டு, அகழ் வெட்டவேண்டும். அல்லது நெருக்கமாக சுற்றிலும் மரங்களை வளர்க்க வேண்டும். அந்த பூமியில், வாழை, கரும்பு, தாமரைக் கிழங்கு, பசும்புற்கள், அரசு, மூங்கில், யானைகள் விரும்பும் விருக்ஷங்கள், இவைகளைப் பயிரிடவேண்டும்.

அவைகளைத் தின்ன ஆசைகொண்டு, அங்கு யானைகள் வரும். அவைகள் உள்ளே இருக்கும்பொழுது, வழிகளையும், ஜலமார்க்கங்களையும், பெரிய பெரிய மரங்களாலடைத்துவிட

வேண்டும். பிறகு, அவைகளில், லக்ஷணமுள்ள யானைகளை, உபாயங்களால் பிடிக்கவேண்டும். இதற்கு "வாரிபந்தம்" என்று பெயர்.

நன்கு பழக்கப்பட்ட, வலிமையுள்ள, பெரிய, பெண் யானைகளின் மீது பாகர்கள் கயிறு முதலிய ஸாதனங்களுடன் ஏறிக்கொண்டு, தழைகளால் தன்னை மறைத்துக்கொண்டு, யானைகளிருக்குமிடம் சென்று, அந்தப் பெண்யானைகளைக் கொண்டு, யானைகளைக் கட்டி இழுத்துவரச் செய்து, அவைகளில், லக்ஷணமுள்ள யானைகளைப் பொறுக்கி எடுத்துக், கொள்ள வேண்டும். இதற்கு வசாபந்தம் என்று பெயர்.

சில யானைகள், பிடியின் மோகத்தால், அதனுடனே வந்துவிடும், அவைகளைப் பிடித்துக் கட்டிவிடுவதுமுண்டு. இதற்கு, அநுகதபந்தம் என்று பெயர்.

விழுந்த யானை, சுலபமாக ஏறமுடியாத, சிறு படுகுழியை வெட்டி, அதன் மீது, வாழை, கரும்பு முதலியவைகளை வளர்த்து, யானை அதில் விழுந்தவுடன், பிடித்துவிடுகிறது. இதற்கு "ஆபாதம்" என்று பெயர்.

அது, அதிக ஆழமான படுகுழியானால், "அவபாதம்" என்று பெயர்.

இவ்விரு முறைகளிலும், யானைகளுக்குத் தீங்கு நேரிடுவதால், கூடாதவைகளாம்.

பிறகு, பிடித்த யானைகளை, ஹே அநிருத்த, புகழ், பராக்கிரமம், பொறுமையுடன், நீ உன் சாலை சென்று, ஆரோக்கியமும் பலமும் பெற்று, அரசனுக்கு ஜயத்தைக் கொடுத்துக் கொண்டிருப்பாயாக, என்ற பொருள்படும் மந்திரத்தால், ஸ்தம்பத்தில் கட்டவேண்டும்.

கஜ கிரஹணவிதி முற்றும்.



# பத்திராதி கஜலக்ஷணம்.

—— o ——

அஞ்சா நெஞ்சம், வெற்றிபெறும் ஆற்றல், ஸாமர்த்தியம், பணிவு, வேலைத்திறன், சொல்லறிதல், பயகாலத்திலும் மயக்கமின்மை, அழகு, வீரம், இவை பத்திரஜாதி கஜங்களின் குணங்களாம். இவை தேஜோம்சமுடையவை களாகையால், புதிய பாக்குப்பழ நிறமுடையவைகளாக இருக்கும்.

கஜங்கள், கிருதயுகத்தில், விரும்பிய உருவங்கொண்டு, விரும்பியவிடமெல்லாம் சென்றுவந்தன.

திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகங்களில், அவைகள், வாஹநமாக உபயோகிக்கப்பட்டன. திரேதாயுகத்தில் அவை களின் குணங்களில், சிறிது குறைவு ஏற்பட்டபடியால், அவைகளுக்கு, "மந்தஜாதி" என்று பெயர் வழங்கப்பட்டது.

பிறகு துவாபரயுகத்தில், அவைகள், மிருகஸ்வபாவத்தை அடைந்தன. ஆகவே அவைகளுக்கு, "மிருகஜாதி" என்று பெயரிடப்பட்டது.

பத்திரஜாதி கஜங்கள், எப்பொழுதும் மதகந்த முடையவைகளாக இருக்கும்.

பத்திரம் — மந்தம் — மிருகம் — இந்த ஜாதிகஜங்கள், முறையே ஒன்பது, எட்டு, ஏழு முழம் நீளமும், ஏழு, ஆறு, ஐந்து முழம் உயரமும், பத்து, ஒன்பது, எட்டு முழம் பருமனும், உள்ளவைகளாம்.

பத்திரஜாதி கஜங்கள், உயர்ந்து பருத்து, வட்டமான, கும்பம், விரிந்த காது, அன்னத்தின் கண் போன்ற கண், மனோஹர காந்தி, வளைந்த துதிக்கை, பருத்த தந்தம்,

செந்தாமரை போன்ற விரல், வில்போல் நடுவில் குழிந்த முதுகெலும்பு, நீண்டவால், அழகிய உடல், பன்றியை யொக்கும் முழங்கால், பாதி மடங்கி பூமியைத் தொடும் துதிக்கை, சிறிது சிவந்த கன்னம், பருத்த கழுத்து, உரம் பெற்ற உடல், புள்ளிகளாலழகிய முகம், சிறந்த வலிமை, சுரசுரப்பான மத்தகம், அழகுற உயர்ந்த உடல், படிந்த நடை, நன்கு அமைந்த ஸந்திகள், மலர்ந்த தாமரை போன்ற கண், சிறந்த வேகம், பகையைக் கண்டு மதம் பொழிதல், ஆகிய லக்ஷணங்களுடையவைகளாக இருக்கும்.

வியாசமுனிவர் கூறியுள்ளது :—

பத்திரஜாதி யானைகளுக்கு, பின்னுடல், துதிக்கை, வால், இவை பருமனுகவோ ஸமமாகவோ இராது. மார்பு உயர்ந்து விரிந்தும், முதுகெலும்பு வில்லைப்போலும், கும்பம், கன்னம், தோள், இவை மிக உயர்ந்து பருத்தும், கால்களும் பிரிஷ்டமும் அகண்டும், இடுப்பு பன்றிபோலும், அடிவயிறு ஆட்டைப்போலும், நகங்களும், தந்தங்களும் பொருத்தமான அளவுடன் மனோஹரமாகவும், கண்கள் தேன் மஞ்சள் நிறமாகவும், சில கண்கள் வெண்மையாகவும், நாக்கு, உதடு, கடைவாய், இவை சிவந்தும், புள்ளிகள் விழுந்து கம்பீரமான தோற்றமும் அமைந்திருக்கும்.

அவைகள், ஆஹாரத்திற்கும் விளையாடுவதற்கும் முதலில் செல்லும். மேகம், பேரிகை, இவைகளின் சத்தத்தைக் கேட்டு, பயமோ கலக்கமோ அடையாது. காரியங்களில் திறமை, எளிதில் அறிதல், நல்ல நடத்தை, மறவாமை, இத்தகைய குணங்களையும், அரசர்க்குரிய லக்ஷணங்களையும் பெற்றிருக்கும். இவை விஜயப்பிரதங்களாம்.

அநுபத்திர ஜாதியானைகள், இளைப்பாகவோ, பருமனுகவோ இராது. இவைகளின் தந்தங்களும், கண்களும் தேன்போலிருக்கும் வில் போன்ற முதுகெலும்பும், வட்டமாய் அழகுற அமைந்த உடலும் உடையவைகளாக இருக்கும்.

மந்தஜாதி கஜங்களுக்கு, துதிக்கை, காது, முகம், இவை அகண்டும், வயிறு, அடிவாலின் சுற்றுவட்டம், தந்தம், இவை பருத்தும், சிங்கக் கண்ணும், செறிந்த மாமிசமும், வலுவும், உள்ளதாம்.

வேறு நூலில் கூறப்பட்டது :—

பருத்த உடல், கூர்மையான காது. அழுத்தமான தந்தம், நகம், வயிறு, அசைந்து தொங்கும் மாமிசம், சிங்கப் பார்வை, கெட்ட மனம், சோம்பல், தூக்கம், அறியாமை, ஊக்கமாக கவளித்தல், கெட்ட செய்கை, இவைகள், தாமதப் பிரகிருதியான கஜங்களின் குணங்களாம்.

சுபகாரியங்களில், மந்தஜாதி யானைமீது ஏறிச் செல்லுவது சிலாக்கியமாகும். இன்பமளிக்கும். அது, கார் மேகம்போல் கருத்த நிறமுடையதாம். சிலேஷ்மம — பித்த மாமிசமுள்ள ஆணுக்கும் பெண்ணுக்கும் பிறந்தது.

வியாஸர் கூறியுள்ளது :-

மந்தஜாதி யானைக்கு, மார்பு, முகம், காது, வால், முதுகெலும்பு, துதிக்கை, இவை விரிந்து நீண்டிருக்கும், ஆண்குறி தொங்கும். வயிறு மடாத்தவளையின் வயிறு போலிருக்கும். கண் மஞ்சளாகவும், அங்கங்கள் பருத்தும், நிறம் கருப்பாகவும், இருக்கும். அறிவின்மை, வலிமை, நுட்பமாயறிதல், மறதி, மதத்தில் நல்ல நினைவு, அதிக கோபம், ஆட்டமற்ற நடை, சிங்க நோக்கு, உயர்ந்த தலை, கீழ்நோக்கிய முகம், பருத்து நீண்ட தந்தம், தொங்கிய வயிறு, நீண்ட நெற்றி, இவைகள், மந்த ஜாதி கஜங்களின் லக்ஷணங்களாம்.

வைசம்பாயனர் கூறியது :—

மிருகஜாதி யானைகளுக்கு, துதிக்கை, கால், கழுத்து, முகம், தந்தம், இவை மெல்லியதாகவும், கண்கள் பெரிதாக வும், வால், ஆண்குறி, உதடு, இவை குட்டையாகவும்,

முதுகெலும்பு சுருங்கியுமிருக்கும், குறைந்த பருமனும், நீளமும் உள்ளது. மெலிந்த உடல், நீண்ட தந்தம், புழுதி நிறம், கபடம், கவனக்குறைவு, நிலையற்றநடை, கோபம், சோம்பல், பித்தாதிக்க சரீரம், ரஜோகுணம், சிவந்த மயிர், இவைகள், மிருகஜாதி கஜங்களின் லக்ஷணமாம். இவை, பித்தங் கலந்த சுக்லசோணிதத்தால் உண்டானவைகளாம்.

பாலகாப்பியர் கூறியது :—

மெல்லிய, விரல், முகம், தந்தம், வால், ஆண்குறி, இலேசான வயிறு, ஒட்டிய கன்னம், கழுத்து, விரிந்த காது, பெரிய கண், இவைகளையுடையது மிருகஜாதி கஜமாம்.

வியாஸர் கூறியது :—

மிருகஜாதி கஜமானது, மெல்லிய உடல், பாதம், நகம், தந்தம், கோசம், இடுப்பு, துதிக்கை, கழுத்து, வயிறு, காது, நீண்ட தலை, வாலின் பின்பாகம், குட்டையான கன்னம், முகவாய்க்கட்டை, மதமுள்ள கன்னம், வளைந்த விரல், தாடை, மயிர், மார்பு, தெளிந்து பருத்த கண், பசுமை நிறம், இவைகளையுடையதாக இருக்கும்.

தனித்து உலாவும். பசுக்கள் மேயுமிடம் செல்லும். வழியோடு நடக்கும், பயப்படும், சபலசித்தமுடையது, கபடமின்மையும், துஷ்டஸ்வபாவமும் உடையது.

பத்திரம், மந்தம், மிருகம், என்ற மூன்று ஜாதிகளில், இருஜாதி குணங்களும், லக்ஷணங்களும் உள்ளவைகள், "மிச்சிரஜாதி" என்றும், மூன்று ஜாதிகளின் லக்ஷணங்களும், குணங்களும் கலந்திருப்பவைகள், "ஸங்கீர்ண ஜாதிகள்" என்றும் கூறப்படுகின்றன.

மிச்சிரஜாதிகளுள், நிறுத்தினல் ஓடுவது, ஓட்டினல் நின்றுவிடுவது, போன்ற சொல்லுக்கு விபரீதமான செய்கையுடைய கஜத்திற்கு, "வியாளம்" என்று பெயர்.

மிச்சிரஜாதி கஜங்கள், பத்திரமந்தம், பத்திரமிருகம், மந்தபத்திரம், மந்தமிருகம், மிருகமந்தம், மிருகபத்திரம், என்று அறுவகைகளாம்.

ஸங்கீர்ணஜாதி கஜங்கள், பத்திரமந்தமிருகம், மந்த மிருகபத்திரம், மிருகமந்தபத்திரம், என மூன்று வகைகளாம்.

மிச்சிர - ஸங்கீர்ண - ஜாதி கஜங்களின் இலக்கணங்கள், மேலுடலில் காணப்படுவதாலும், கீழுடலில் காணப்படுவதாலும், மறுபடியும் இருவகைகளாம்.

எனவே, மிச்சிர - ஸங்கீர்ண - ஜாதி கஜங்கள் ($6+3=9 \times 2=18$) பதினெட்டு விதங்களாம். ஏ! அரசனே கலியில் மிச்சிர கஜங்களே காணப்படுகின்றன. அவைகளில், நல்லவைகளேயும், கெட்டவைகளேயும், பாகுபாடு செய்து கூறுகிறேன்.

இவைகளுக்கு, நிறம், குணம், முக லக்ஷணம், இவைகளால், பெயர் அமைந்திருக்கிறது. எனவே, சுத்தம், மிச்சிரம், ஸங்கீர்ணம், என்ற பாகுபாடுகள், அவைகளுடைய லக்ஷணங்களாலும், குணங்களாலும் அமைந்திருக்கின்றன.

முன்னுடல் பத்திரஜாதி லக்ஷணமும், பின்னுடல் மந்த ஜாதி லக்ஷணமும் உடையது, "பத்திரமந்த" ஜாதியாம். இது சிறந்தது.

இவ்விதம் பத்திர மிருகஜாதி லக்ஷணம் கலந்திருப்பது, "பத்திர - மிருக"மாம். மிருகரூபமும் கலந்திருப்பதால், கெட்டதாக ஆகாது. நன்மையையே கொடுக்கும்.

முன்னுடல், பத்திரம், அல்லது மந்தமாகவும், பின்னுடல் மிருகமாகவும் இருப்பது, வேகமாகச் செல்லும்.

கண்களுக்குப் பெருமை கூறப்படுகின்றது. எனவே, அது மிருகஜாதியைப் போன்ற கண்ணுடையதானல், சிறந்ததன்று.

மந்த லக்ஷணம் அதிகமாகவும், மிருக லக்ஷணம் லேசாகவும் காணப்பட்டால், அது, "மந்த மிருக" மிச்சிர ஜாதியாம். இது மத்திமமானது.

மிருகம், மந்தம், இவைகளின் லக்ஷணங்களும், ஸத்துவமும் காணப்பட்டால், அது, "மிருகமந்த" ஜாதியாம். அது, அதமமாம். அதற்கு, ஸத்துவமும், பலமும் இராது,

இவ்விதமே, "மிருகபத்திரமு"மாம். இதுவும் அதமம் தான். துதிக்கை, கண், தந்தம், மத்தகம், இவைகளில், மிருக லக்ஷணங்களும், மற்ற அங்கங்களில் பத்திர லக்ஷணங்களும், காணப்பட்டாலும், அது அதமந்தான்.

உடலில், பத்திர - மந்த - லக்ஷணங்கள் கலந்து காணப்பட்டு, மிருக லக்ஷணம் லேசாக காணப்பட்டால், அது, "பத்திர - மந்த - மிருக", ஸங்கீர்ண ஜாதியாகும். (சிறந்ததாம்)

மந்தலக்ஷணம் அதிகமாகவும், மிருகலக்ஷணம் லேசாகவும், பத்திரலக்ஷணமும் கலந்து காணப்பட்டால், அது, மந்த – மிருக - பத்திர ஸங்கீர்ண ஜாதியாகும். அது மத்திம குணமுடையது.

மிருக லக்ஷணங்கள் அதிகமாகவும், பத்திர - மந்த லக்ஷணங்கள் குறைவாகவும் காணப்பட்டால், அது, "மிருக-பத்திர – மந்த" ஸங்கீர்ண ஜாதியாகும். அது அதமமாகும். அதற்கு, ஸாமர்த்தியமும், வலிமையும் இராது. துதிக்கை, தந்தம், மத்தகம், இவைகளில், மிருகஜாதி லக்ஷணம் காணப்பட்டால், அது அதமந்தான்.

உடலின், முன் கூறு பின் கூறுகளில் காணப்படும் லக்ஷணங்களால், மிச்ரஜாதிகளும், மின்கூறு, நடுக்கூறு, பின்கூறுகளால், ஸங்கீர்ணஜாதிகளும், கூறப்பட்டன. இவ்விதமே, உடலின், மேல்கூறு, கீழ்க்கூறு, என்ற இரு கூறுகளில், காணப்படும் லக்ஷணங்களால், மிச்சிரஜாதிகளும், மேற்கூறு, நடுக்கூறு, கீழ்க்கூறு. என்று, மூன்று கூறுகளிற் காணப்படும் லக்ஷணங்களால், ஸங்கீர்ண ஜாதிகளும், கூறப்பட்டிருக்கின்றன.

பத்திரஜாதி கஜ லக்ஷணம் முற்றும்.

# பிரம்மாம்சாதி கஜ லக்ஷணம்.

—— o ——

ஒன்றோடொன்று இணைந்த புள்ளிகள், மனதைக்கவரும் பொன்னிறமேனி, சிவந்த கடைக்கண், வலுப்பெற்ற மனோஹரமான தந்தம், இவைகளையுடையது, "பிரம்மாம்சம்" உள்ள கஜமாகும். இது, அரசர்கள் பூஜிக்கத்தக்கது. ஜயத்தையும் ஆரோக்கியத்தையும் கொடுக்கும்.

சிறுட னமைந்த கழுக்கட்டை, கழுத்து. பெரிய தோள்ப்பட்டை, செந்தாமரை நிறமுகம், இரட்டை உரோமங்கள், நீண்டகாலம் மதம், பகையை வெல்லுதல், இடியைக்கேட்டு களிப்புறுதல், ஆகிய லக்ஷணங்களுடையது, "பிராஜாபத்தியாம்சம்" உடையது. இது, மக்கட்பேற்றைக் கொடுக்கும்.

உடலில், புள்ளிகள் அல்லது கோடுகள், ஸ்வஸ்திகம், தாமரைமலர், வர்த்தமானம், நந்தியாவர்த்தம், (வர்த்தமானம்—வாயில் எடுத்துக்கட்டி; நந்தியாவர்த்தம் — மாளிகையின் ஒருவித அமைப்பு) இவைகளைப்போல் அமைந்து, கண்கள் செந்தாமரை நிறமாகவும் இருந்தால். அந்த கஜம், "இந்திராம்சம்" உள்ளது. இது, சண்டையில் வெற்றியையும், பகைவனின் செல்வத்தையும், தரும்.

சிவந்த உதடு, நாக்கு, நெல்லிக்கனியின் நிறம், குங்கும நிறமான கண், தந்தம், இவைகள், "தநதாம்சகஜத்தின்" லக்ஷணம். இது, நிறைந்த செல்வத்தையும், ரத்தினங்களையும், கொடுக்கும். இது, அரசர்கள், வீட்டில் வைத்து பூஜிக்கத் தக்கது.

கருமேக நிறம், நெய்போன்ற மதம், அழகான ஆஸநம், எடுப்பான தலை. மேகத்தை ஒக்கும் கர்ஜனை, அதிக மதப் பெருக்கு, இவையுடையது, "வருணாம்சகஜ"மாகும். இது, சண்டையில் பகையை வென்று வெற்றியை யளிக்கும்.

வெண்மை நிறம், புள்ளிகள், கழுத்தில் மூன்று மடிப்புகள், தேன்மஞ்சள் நிறக் கண், தாழம்பூநிறத் தந்தம், தளிர்போன்ற விரல், ஆகிய லக்ஷணங்களுள்ளது "சந்திராம்ச" கஜமாகும். இது, போரில் வெற்றி தரும்.

தீக்கொழுந்து போன்ற மயிர், செம்பொன் நிறமான தலை, கண், துதிக்கை, தாடை மயிர், வால், இவைகளுடையது, "அக்கினிஅம்ச"மாகும். இது, போரில், நெருப்புபோல், பகைப்படையைச் சாம்பலாக்கும். குற்றம்போன்ற தோற்றமே, இதற்கு குணமாம். பகைப்படையில், மிகக் கொடுஞ்செயல் புரிந்து, நடுங்கச் செய்யும்.

தந்த மத்தியிலிருந்து, முறையே சிறுத்து பக்கங்கள் சிவந்த துதிக்கை, நீண்ட விரல், நறுமணமுள்ள துதிக்கை ஜலம், நீண்ட மூச்சு, மேகதுவநி, சுருக்கமற்ற அழுத்தமான உடல், கருத்து மிருதுவான மெல்லிய மயிர், தாமரைமலர் நிறம், வட்டமாய் நீண்டு வலுவுள்ள தாழம்பூநிற தந்தம், வட்டமாய் அகண்டு நடுவில் குழிந்த கும்பங்கள், அகண்டு மயிருள்ள உதடு, மதம் பெருகும் அழகிய கன்னம், அழகு வாய்ந்த மனோஹரமான முகமண்டலம், கடைக்கண் சிவந்து வெண்சிவப்பு நிறமான மயக்கும் கண், நரம்பின்றி மிருதுவாய் விரிந்து வலுப்பெற்ற ஸமமான, தாளம் துந்துபிபோல் ஒலிக்கும் காதுகள், அழகு வாய்ந்த நெற்றிப் புறங்கள், ஸமமான முதுகு, வளைவின்றி குட்டையான கழுத்து, நீண்ட சதைப்பற்றுள்ள தோள், நீண்டு பருத்து வளைவில்லாமல் அழகு வாய்ந்த முன்கால், ஆமைபோன்ற காலடிகள், சிறிது சிவந்து அர்த்தசந்திரன் போன்ற மனோஹரமான நகங்கள், விரிந்த மார்பு, வட்டமான வயிறு, சிறிய முலைக்காம்பு, நழுவாத ஆண்குறி, பன்றிபோன்ற பின்புறம், நாண்பூட்டிய வில்லையொக்கும் முதுகெலும்பு, நீண்டு அழகான வால், சங்கு-சக்கிரம்-கதை-வடிவமான புள்ளிகள், அல்லது மடிப்புகள், இருபது, பத்து, அல்லது, எட்டு உத்தம லக்ஷணங்கள், ஆகிய சிறந்த லக்ஷணங்களுடையது, "விஷ்ணு அம்சம்" உள்ள கஜமாகும். இது பட்டாபிஷேகத்திற்குச் சிறந்தது. பூஜிக்கத் தக்கது. ஸகல காரியங்களையும், நிறைவேற்றும்.

பிரம்மாம்சாதி கஜ லக்ஷணம் முற்றும்.



# ஸாங்கிராமிக-யஞ்ஞார்ஹ-கஜ லக்ஷணம்.

—— o ——

நீண்ட விரலுள்ள துதிக்கை, நெருக்கமான காது, கம்பீரமான முகம், நீல நிறம், வல்லமை, அஞ்சா நெஞ்சம், நல்ல அழகு, இவைகளுள்ளது, யஞ்ஞார்ஹ கஜமாகும். அரசர்களுக்கும் சிறந்தது.

நல்ல ரத்த ஓட்டத்தால் வேகமாகச் செல்லும் யானைகள், நூறு வருடங்கள் பிழைத்திருக்கும். அவைகள், சண்டைகளுக்குச் சிறந்தவைகள். பொக்கிஷத்தை நிரப்பும்.

தேன், உறைந்த நெய், கோமேதகம், சூரியன், நெருப்பு, இவைகள் போன்ற கண்படைத்த யானைகள், சண்டையில், வெற்றியைக் கொடுக்கும்.

ஸாங்கிராமிக-யஞ்ஞார்ஹ-கஜ லக்ஷணம் முற்றும்.

# வர்ண கஜ லக்ஷணம்.

—— o ——

யானைகளின் சுத்தமான நிறங்கள் மூன்று. கலப்பு நிறங்கள் மூன்று, மறைந்து காணப்படும் நிறங்கள் மூன்று.

வெளுப்பு, சிகப்பு, கருப்பு, இம்மூன்றும், சுத்தமான நிறங்கள். தோல், நகம், வால்நுனி, (கன்னம், பின்தட்டுகள்) இவைகளின் நிறங்களைக்கொண்டு, யானைகளின் நிறங்களை, நிச்சயிக்கவேண்டும்.

யானைகள், கபாதிக்கத்தால் வெண்மையாகவும், பித்தாதிக்கத்தால் சிவப்பாகவும், வாதாதிக்கத்தால் கருப்பாகவும், இருக்கின்றன.

வெண் கருப்பு, வெண் சிகப்பு, கருஞ்சிகருப்பு, என மிச்சிரவர்ணங்கள் மூன்று.

சிலர், சிகப்பு, மஞ்சள், கருப்பு, வெளுப்பு, என்று நிறங்கள் நான்கு என்றும் கூறுகின்றனர்.

வாத பித்த கபங்களின் ஏற்றத்தாழ்வால், மிச்ரவர்ண கஜங்கள் உண்டாகின்றன.

உள்ளேறு வெளுப்பான சிகப்பு, வெண்கருப்பு, செங் கருப்பு என்று, அந்த வர்ணகஜங்கள், மூன்று.

குங்குமம், தாமரைப்பூ, ரக்தம், சங்கு, வைடூரியம், மின்னல், மேகம், இந்திர நீலம், அரிதாரம், குசம், இந்திர முள்ள யானைகள், திக்கஜங்களாம். அவைகள், இப்புவியில் இல்லை.

வர்ண கஜ லக்ஷணம் முற்றும்.

## சாயா கஜ லக்ஷணம்.

யானைகளின் உடலில், பூமி, ஜலம், அக்கினி, வாயு, ஆகாயம், இவைகளின் நிறம் காணப்படுகிறது. பூமி, ஜலம், தேயு, இவைகளின் நிறம் நல்லது. வாயுவும், ஆகாயமும், கூடாது.

உடலில் பல நிறங்களுள்ளது, பிருதிவீ சாயையுள்ள கஜமாகும். கார்மேகநிறம் உள்ளது, ஜலச்சாயையுள்ளதாகும். பட்டுப்பூச்சி, உதயசூரியன், தாமரைக்குஞ்சம், இவைகளைப் போன்ற நிறமுள்ளது, அக்கினிச்சாயையுள்ளதாகும்.

பிரகாசமின்றி, சிதைந்து, வெறுக்கத்தக்க சாம்பல் நிறமுள்ளது, வாயுச்சாயையுள்ளதாகும். வெறுத்து, இகழத் தக்க லேசான நிறமுள்ளது, ஆகாசச்சாயை உடையதாகும்.

பூச்சாயை ராஜ்ய லாபத்தையும், ஜலச்சாயை புகழையும், அக்கினிச்சாயை செல்வத்தையும், கொடுக்கும்.

வாயுச்சாயை துன்பத்தையும், ஆகாசசாயை அபகீர்த் தியையும் கொடுக்கும்.

சாயா கஜ லக்ஷணம் முற்றும்.

# கஜ கந்த லக்ஷணம்.

—— 0 ——

கந்தத்தை, வியர்வை, மதம், மூத்திரம், கக்கிய ஆகாரம், இவைகளைக்கொண்டு அறியவேண்டும்.

ஸுகந்தம் நன்மையையும், துர்கந்தம் தீமையையும், தரும்.

வெட்டிவேர், (விளாமிச்சைவேர்) நெய், பொரி, தாமரை மலர், ஜாதிப்பூ, பாதிரிப்பூ, இவைகளின் மணமுள்ள கஜம், நன்மையைக் கொடுக்கும்.

செம்மறியாடு, மான், முள்ளம்பன்றி, நாயின் மாமிசம் தின்பவன், காக்கை, இவைகளின் நாற்றமுள்ளது, தீமையைத் தரும்.

மீன், மத்யம், இவைகளின் நாற்றமுள்ளது, "கந்தர்வ ஜாதி" கஜமாகும்.

அசோகம், குண்டுமல்லி, இவைகளின் மணமுள்ளது, "யக்ஷஜாதி" கஜமாகும்.

நீர்நொச்சி, கருங்காலி, இவைகளின் மணமுள்ளது, "தாநவ" ஜாதி கஜமாகும்.

தாமரைமலர், மருதாணிப்பூ, நீலம், ஏழிலைப்பாலை, இவைகளின் மணமுள்ளது, "தேவ" ஜாதி கஜமாகும்.

கஜ கந்த லக்ஷணம் முற்றும்

# கஜ ஸத்வ பரீக்ஷை.

யானைகளில், அழகாக இருப்பதைக் காட்டிலும், பெரிதாக இருப்பது சிறந்தது. பெரிதைக் காட்டிலும் பலமுள்ளதும், அதைவிட ஸத்துவம் உள்ளதும், சிறந்ததாகும்.

ஜீவராசிகளின் ஹிருதயத்தில், ஸ்படிகம் போல் "ஸத்துவம்" இருக்கிறது. அதை, உபாயத்தாலேயே அறிய வேண்டும்.

பதினெண்ணாயிரம் பலம் (56¼ மணு) தங்கம், தாமிரம், வெள்ளி, இவைகளின் சுமையைச் சுமந்துகொண்டு, யானைகளுடன், களைப்பின்றி, வேகமாக, பத்து யோஜனை தூரம் நடந்து செல்லும் யானை, "உத்தமஸத்துவம்" உள்ளதாகும். (ஸத்துவம் - ஸாமர்த்தியம்.)

பதினாலாயிரம் பலம் (43¾ மணு) சுமந்து, ஏழு யோஜனை செல்லும் யானை, "மத்திமஸத்துவம்" உள்ளதாகும்.

பதினாயிரம் பலம் (31¼ மணு) சுமந்து, ஐந்து யோஜனை செல்லும் யானை, "அதமஸத்துவ" முள்ளதாம்.

கருங்கல், செங்கல், அல்லது அழுத்தமான பலகை, இவைகளை இணைத்து, பூமியில் புதைத்து, மூன்று முழம் உயரம், பதினான்கு முழம் அகலம், எட்டு முழம் பருமன் உள்ள மேடைசெய்து, அதன் இருபக்கங்களிலும், அம்பு விழும் தூரம் சரிவாகச் செய்து, சிறந்தநாளில், பகையுள்ள இரு யானைகளை அலங்கரித்து, —

"மந்த்ரேச நாத பூதேச விக்நநாத கணாதிப ।
கஜாநாம் ஸத்வஸந்தேஹே குரு ஸத்வநிர்ணயம் ॥"

என்ற மந்திரத்தால் ஜபித்த ஜலத்தை அவ்விரு யானைகளின் மீதும் தெளித்து, சண்டைக்கு விடவேண்டும்.

தந்தங்களின் பிடிப்பு விடும்படி, மூங்கில் தடிகொண்டு அடிக்கும் அடி, பெண் யானையின் இடி, மணி, பேரிகை, கர்ஜனை, முதலிய பேரொலி, இவைகளைப் பொருள் செய்யாமல், வருந்தாமல், ஓடிவிடாமல், கோபங்கொண்டு, எதிர்க்கும் யானையை துதிக்கையால் அடித்தும், தந்தத்தால் இடித்தும், கொன்றுவிட நினைக்கும் கஜமானது, உத்தமஸத்வம் உடையதாகும்.

கஜ ஸத்வ பரீக்ஷை முற்றும்.



# நாநாஸத்வ கஜ லக்ஷணம்.

—— o ——

நல்ல மனம், சிறந்த அழகு, கடுங்கோபம், சிறந்த ஒளி, நிலைத்த ஆற்றல், உத்ஸாஹம், விளையாட்டில் புகழ், ஸந்தோஷம், நன்றியறிதல், இவைகள், ஸத்வகுணமுள்ள யானைகளின் குணங்களாகும்.

கெட்ட மனம், துஷ்டச் செயல், பெண் யானையிடம் மோஹம், இவையுள்ளது, ரஜோகுணமுள்ளது.

ஆசை, பலஹீநம், கொடுமை, மறதி, கவனக்குறைவு, பரிஹாஸம், தூக்கம், அறிவின்மை, இவைகள், தாமத குணமாகும்.

தேவர், நாகர், யக்ஷர், கந்தர்வர், முதலிய தேவஜாதி கன்னிகைகள், யானைகளிடம் மோஹங்கொண்டு, பெண் யானை ரூபங்கொண்டு, திக்கஜங்களுடன் புணர்ந்தனர். சிலர் கர்பந்தரித்தனர். அவர்களிடம் ஜனித்த யானைகளே, தாயின் குணத்தால், தேவாதி ஜாதி கஜங்களென கூறப்படுகின்றன.

நல்ல எழில், ஆம்பல், சந்தனம், பிறிஸேப்பாலே, மான், தாமரை மலர், சரக்கொன்றைப்பூ, இவைகளின் மணம், மலர்ந்த முகம், ஸந்தோஷம், நல்ல உயரம், பிரியமான செய்கை, இவைகளுடையது, "தேவஸத்வ"முள்ள கஜமாகும்.

குண்டு மல்லிகைப்பூ, முன்னே, தாமரைமலர், புன்னேப்பூ, நாகலிங்கைப்பூ, சந்தனம், இவைகளின் மணம், நாதத்தில் ஆசை, அழகிய நடை, தந்தம், நேத்திரம், இவைகளும், கும்பம், தலை, துதிக்கைகளில் நறுமணமுமுள்ளது "கந்தர்வ ஸத்வம்" உள்ள கஜமாகும்.

தேன், பால், நெய், பாயஸம், மாம்பூ, இவைகளின் மணம், ஸாமகானத்தில் விருப்பம், யானைகளிடம் அன்பு, அமைதி, ஸ்நாநத்தில் பிரியம், அழகிய நடை, இக்குணங்க ளுள்ளது, "பிராம்ஹணஸத்துவம்" உள்ள கஜமாகும்.

சந்தனம், தாமரைமலர், அரிதாரம், மனேசிலே, வெள்ளைக் குங்கிலியம், இவைகளின் மணம், யுத்தத்தில் ஸாமர்த்தியம், பயமின்மை, ஆயுதங்களை உபயோகிக்கும் திறமை, ஆகிய குணங்களுடையது, "க்ஷத்ரியஸத்துவம்" உள்ள கஜமாகும்.

தாடையிலும் நாக்கிலும், உச்சித்திலகம், சம்பாப்பயிர், எள்ளு, தாழம்பூ, முல்லேப்பூ, இவைகளின் மணம், ஸஹிக்கும் தன்மை, மாமிஸ போஜனம், ஸமாதானத்தில் நாட்டம், கோபமடைந்தாலும் சீக்கிரமாக ஸமாதானமடைதல், ஆகிய குணங்களுள்ளது, "வைச்யஸத்துவம்" உள்ள கஜமாகும்.

அசுத்தங்களில் ஸந்தோஷம், பயம், காய்ந்த அன்னத் தைப் புஜித்தல், நண்டின் நாற்றம், கோபம், அல்பத்தனம், நன்றிகொல்லுதல், ஆகிய குணமுடையது, "சூத்ரஸத்துவம்" உள்ளதாம். இது மிகவும் இழிவானது.

சவம், இரும்பு, இவைகளின் நாற்றம், தனிமையில் ஆசை, இரவில் சுற்றித்திரிதல், நிலேயற்ற மனம், இடிமுழக்கம் போன்ற சத்தம், எப்பொழுதும் கோபம், அறிவீனம், ஆகிய குணங்களுடையது, "பிசாசஸத்துவம்" உள்ள கஜமாகும்.

பூமி, பாசி, துளஸி, சகதி, கள்ளு, மாமிசம், இவைகளின் நாற்றம், இடி முழக்கத்தில் நடுக்கம், கோபம், நீருள்ள சேற்றில் ஆசை, ஆகிய குணங்களுள்ளது, "நாகஸத்துவம்" உள்ளதாகும்.

காக்கை, குரங்கு, கழுதை, ஒட்டகம், பூனை, மூத்திரம், மலம், இவைகளின் நாற்றம், சோறு, மாமிசம், ரக்தம், இவைகளில் பிரியம், கபடம், கொடுமை, நன்றிக்கேடு, விபரீதச் செயல், இவைகளுள்ளது, "ராக்ஷஸஸத்துவ"மாம்.

வியாஸர் கூறியது :—

பட்டாபிஷேகத்திற்குரிய குணம், சிறந்த லக்ஷணம், காரியத்தை முடிக்கும் ஆற்றல், வலிமை, சுருக்கமற்ற உடல், பகையை வெல்லும் ஆற்றல், வலிமை, வியாதியில்லாமை, ஆகிய குணங்களுள்ளது, "தேவஸத்வம்" உள்ள கஜமாகும்.

அறிவு, ஸாமர்த்தியம், காமம், சபலசித்தம், சுறுசுறுப்பு, கட்டுமுனையில் பார்வை, புகழத்தக்க குணம், இவைகளுள்ளது "கந்தர்வஸத்வம்" ஆகும்.

நீராடும் ஆசை, கோபம், பயம், ஆஹாரத்தில் பேராசை, இவைகளுள்ளது, "பிராம்ஹணஸத்துவ" மாகும்.

அமைதி, வல்லமை, உத்ஸாஹம், யுத்த ஸாமர்த்தியம், தைரியம், இவைகளுடையது, "க்ஷத்ரியஸத்துவ" மாகும்.

கபடம், துஷ்டச்செயல், ஸாமர்த்தியம், அருவறுக்கத்தக்க குரல், சண்டையில் பயம், ஆகிய குணமுடையது, "வைசிய ஸத்துவம்" உள்ள கஜமாகும்.

தண்டித்து அடக்கவேண்டிய துஷ்டஸ்வபாவம், அல்பத் தனம், கோபம், கெட்ட மனது, வல்லமை இருந்தும் சண்டையில் நிலைத்து நிற்காமை, ஆகிய குணங்களுள்ளது, "சூத்திரஸத்துவம்" உள்ள கஜமாகும்.

ரஜோகுணமுள்ளது பித்தாதிக்க சரீரமுள்ளதாகும். அது, அசைவற்றிருக்கும் நேர்வழியில் போகாது. அறிவற்றது. பைத்தியம்போல் செயல்புரியும். இத்தகைய குணமுடையது, "பைசாசஸத்துவம்" உள்ளதாகும்.

நன்றி கொல்லுதல், கொடுமை, நேர்வழி நடவாமை, மதத்தில் அதிக ஆஹாரம் செய்தல், இந்த குணமுள்ளது, "நாகஸத்வம்" உள்ளதாம்.

ஸர்பஸத்துவமும் ராக்ஷஸ ஸத்துவமும் உள்ள யானை, வாதாதிக்கமுள்ளது.

ராக்ஷஸஸத்வகஜம், தூக்கமும் சபலசித்தமும் உள்ளதாக இருக்கும்.

நாநாஸத்வ கஜ லக்ஷணம் முற்றும்.

# தேவாதி ஸத்வ கஜ பலன்.

---

தேவ கந்தர்வ ஸத்துவ கஜம் அரசர் ஸவாரிக்கும், க்ஷத்திரியஸத்வம் சண்டைக்கும் வைச்யஸத்வம் உல்லாஸ யாத்திரைக்கும், சூத்ரஸத்வம் சுமை சுமக்கவும், பிசாச ராக்ஷஸ ஸத்வம் வியூஹபேதநத்திற்கும் ஸமாதான காரியங்களுக்கும் சிறந்ததாகும்.

தேவாதி ஸத்வ கஜ பலன் முற்றும்.

# கஜ ஸ்வர லக்ஷணம்.

சங்கு, மேகம், அன்னம், துந்துபி, புலி, சிங்கம், காளை, இவைகளைப்போன்ற சத்தமுள்ள யானைகள், சிறந்தவைகள். நாய், காக்கை, நரி, பன்றி, குரங்கு, இவைகளின் சத்தமுள்ளவை, கெட்டவைகளாகும்.

தாடை, உதடு, தலை, கழுத்து, நாக்கு, துதிக்கை, மார்பு, காது, இவைகளிலுண்டாகும் துவனிக்கு, "பிரும்ஹிதம்" என்று பெயர்.

கழுத்தில் உண்டாகும் துவனிக்கு "கர்ஜிதம்" என்றும், மார்பில் உண்டாகும் துவனிக்கு "ரவம்" என்றும், நாக்கு, காது, இவைகளில் உண்டாகும் துவனிக்கு "ரவம்" என்றும், கன்னங்களில் உண்டாகும் துவனிக்கு "உத்குரோசம்" என்றும், துதிக்கை, தலை, இவைகளில் உண்டாகும் துவனிக்கு "நிநதம்" என்றும், பொதுவாக எல்லா இடங்களிலும் உண்டாகும் துவனிகளுக்கும், "பிரும்ஹிதம்" என்றும் பெயர்.

நாக்கு, காது, இவைகளிலுண்டாகும் துவனியானது, அன்னம், துந்துபி, இவைகளின் ஒலியையும், கன்னத்திலுண்டாகும் சத்தம் புலியின் சத்தத்தையும், துதிக்கை, தலை இவைகளிலுண்டாகும் துவனி, சிங்கம், காளை, இவைகளின் சத்தத்தையும் ஒத்திருக்கும்.

துவனியானது, "பிரும்ஹிதம்" "கர்ஜிதம்" "பேநாயிதம்" என்று, மூன்றே விதமாகவும் கூறப்பட்டிருக்கிறது.

இவைகள், முறையே, தாடை, கழுத்து, அடிநாக்கு, இவைகளில், உண்டாகின்றன.

துதிக்கையால் மிருதங்க துவனியையும், காதுகளால் துந்துபி துவனியையும், வாயால் மடாத்தவளையின் துவனியையும் உண்டுபண்ணுகிற யானை, பூஜிக்கத்தக்கது.

கஜ ஸ்வர லக்ஷணம் முற்றும்.



# கஜகதி லக்ஷணம்.

—— o —

தோள் குலுங்காமல், உடல் அதிகமாக ஆடாமல், கால்களைப் பதியவைத்து, மல்லன், சிங்கம், கிளி, புலி, வேங்கை, இவைகளின் நடையையுடைய யானை, சிறந்தது.

ஸந்தோஷத்தாலோ, திமிராலோ, வேகமாகவோ, மெதுவாகவோ, நடந்தாலும், அதன்மீது ஸவாரி செய்பவனுக்குச், சோர்வு உண்டாகாமலிருந்தால், அந்த யானையின் நடை, சிறந்ததாகும்.

செந்நாய், ஓணான், ஒட்டகம், கீரி, இவைகளின் நடையை ஒக்கும் நடை, கெட்டது.

பின்னுடல், வால் முதலியவைகள் சீராக இல்லாமல், வேக நடையாலும், மெதுவான நடையாலும், தோள் குலுங்கும்படி நடக்கும் யானையின் நடை, இழிவானது.

புத்து, மரம், புதர், செடிகளை அழிப்பதற்கு, ஸந்தோஷம் பொங்கும் பார்வையும், நிமிர்ந்த முகமும், கடுகிய நடையுமுள்ள யானை, ஜயத்தை யளிக்கும்.

யுத்த ஸாமான்களை முதுகில் ஏற்றிக் கட்டும்பொழுது, உடம்பைச் சிலிர்த்துக்கொண்டு, "பிரும்ஹித சப்தம்" செய்யும் யானை, வெற்றியைக் கொடுக்கும்.

யுத்தஸந்நாஹ காலத்தில், வலது தந்தத்திலும், இடது தந்தத்திலும், துதிக்கையைச் சுற்றிக்கொள்ளும் யானை, ஜயந்தரும்.

கஜ கதி லக்ஷணம் முற்றும்.

—:0:—

# ஆவர்த லக்ஷணம்.

—— () ——

**சி**று புள்ளிகளின் இயற்கையமைப்பு, இயற்கையான வளைவுகளுடன் அமைந்த சுருக்கங்கள், சுருக்கங்களின் சேர்க்கை, இவைகளால், பல உருவங்களாகக் காணப்படுவதே, கஜங்களின் சுழிகளாகும். இவைகள், எக்காலத்திலும் பலனைக் கொடுக்கும். சுழிகள், வலது பக்கத்தில் வலமாகவும், இடது பக்கத்தில் இடமாகவும் சுழித்திருந்தால், அவை, நல்ல பலன்களைக் கொடுக்கும்.

அரைக்கட்டு, துதிக்கை, மார்பு, விலாப்புறம், தோள்பட்டை, மூத்திரத் துவாரம், அதன் சுற்றுப்புறம், முன் கால்களின் மேல்பாகம், கழுக்கட்டை, வாலின் குஞ்சம், வால், நெற்றி, புறங்கால், நகங்களின் சுற்றுப்புறம், நடுமுதுகு, ஆகிய பதினைந்து இடங்களில் காணப்படும் சுழிகள், சிறந்தவைகளாம்.

இவைகள், க்ஷேமம், ஆரோக்கியம், ஜயம் இவைகளைக் கொடுக்கும்.

இச்சுழிகள், சங்கு, தாமரை, குடம், மீன், வர்த்தமானம், மதில், கண்ணாடி, விருஷபம், விளக்கு, மாளிகை, தோரணம், வேதிகை, யூபம், சக்தி, வேல், வில்லு, சாமரம், பரசு, குடை, இவைகளின் உருவங்களைப்போல் நன்கு அமைந்திருக்கும்.

பின்னுடல், இடுப்பு, கன்னம், கழுத்து, மார்பு, தாடை, ஆண்குறி, வயிறு, கால் கணுக்கால், நகம், அண்டபாதம், விருஷணம், கணைக்கால், அதன் பின்புறத்திய ஆடுசதை, முழங்கால், விரல், மஸ்தகம், கும்பங்களின் கீழ்ப்பாகம், தந்த மத்தியம், கருவிழியோரம், கழுத்து, மர்மஸந்திகள், இவைகளில் காணப்படும் சுழிகள், கெட்டவைகளாம் குலத்தையும், பொக்கிஷத்தையும் அழிக்கும்.

லக்ஷணமான விரல், துதிக்கையின் தோஷத்தையும், துதிக்கை, தந்த தோஷத்தையும், தந்தம், முகதோஷத்தையும், முகம், நேத்திர தோஷத்தையும், நேத்திரம், நகதோஷத்தையும், நகம், இடுப்பிலுள்ள தோஷத்தையும், இடுப்பு, துடைகளின் தோஷத்தையும், துடை, உடல் தோஷத்தையும், உடல், ஸந்திகளிலுள்ள தோஷத்தையும், பின்னுடல், வாலின் தோஷத்தையும், வால், கோசத்தின் தோஷத்தையும், தோஷமற்று சுபலக்ஷணமுள்ள தோஷமானது, ஸகல அங்கோபாங்கங்களிலும் காணப்படும் ஸகல தோஷங்களையும் போக்கி விடும்.

துதிக்கை விரல், போற்றத்தக்க லக்ஷணமுடையதானால், யானை லக்ஷணம் அற்றதானாலும், தெரிந்தோ, தெரியாமலோ தோஷங்களுள்ளதானாலும், அக்குற்றங்களை நீக்கிவிடும், தந்த தோஷம், முகலக்ஷணத்தைக் கெடுத்துவிடும்.

ஆவர்த்த லக்ஷணம் முற்றும்.

# கஜ மஹா தோஷங்கள்.

———o———

**து**திக்கை, கண், தந்தம், காது, கால், வால், தொப்பிள் முதலிய அங்கங்கள், அதிகமாகவோ, குறைந்தோ, அளவுக்குமேல் விசாலமாகவோ, சிறுத்தோ, மிகக் குட்டையாகவோ, அதிக நீளமாகவோ இருந்தாலும், முன்னுடல், பின்னுடல், அல்லது இரண்டுமே சீரின்றி குறைந்திருந்தாலும், கீழ்க்கால் மயிரில்லாதிருந்தாலும், உடல்முழுதும் மயிர் மண்டியிருந்தாலும், விஷமரோமமுடையதானாலும், ஜலோதரம், கபடம், பழிவாங்குதல், ஊமை, செவிடு, பைசாசதோஷம், வியாளகுணம், இவைகள் உள்ளதானாலும், கருப்புக்கண், பெருங்குதிகால், அருவருக்கத்தக்க அவ

லக்ஷணம், விகாரமான யோனி, கோசம், இவைகளை யுடையதானாலும், மஹா தோஷமுடைய கஜமாம். இந்த தோஷங்கள் ஒவ்வொன்றும், கொடிய பலனைக் கொடுக்கும். அரசனையே ஒழித்துவிடும்.

கஜ மஹா தோஷம் முற்றும்.

# கஜ பரிமாணம்

| | உயரம், | நீளம். | சுற்றளவு. | ஜாதி. |
|---|---|---|---|---|
| முழம் | 7 | 9 | 10 | பத்திரம். |
| ,, | 6 | 8 | 9 | மந்தம். |
| ,, | 5 | 7 | 8 | மிருகம். |
| ,, | 8 | 10 | 11 | அராளம். |
| ,, | 9 | 11 | 12 | அத்தியராளம். |

யோஜனை 700. 900. 1000 திக்கஜம்,

இதற்கு மாறான அளவுள்ளது, ஸங்கீர்ணம். மிருகத்திலும் குறைந்த அளவுள்ளது, வாமனம். அதிலும் குறைந்த அளவுள்ளது, குப்ஜம்.

முகத்திலிருந்து அடிவால் வரையிலுள்ள அளவு, நீளமாகும். முதுகு, விலாப்புறங்கள், வயிறு இவைகளின் நீளம் சுற்றளவாகும். அடிக்காலிலிருந்து இரு தோள்களின் மத்தியம் வரையுள்ள நீளம் உயரமாகும். சுற்றளவு, முன் கால்களை அடுத்து எடுக்க வேண்டும். இவைகளை அளப்ப தற்கு, கயிறு அல்லது கம்பிகளை உபயோகிக்க வேண்டும்.

பரமாணு முதல், யோஜனை வரை, அளவு:—

பரமாணு, கண்ணுக்குப் புலப்படாது.

| | |
|---|---|
| 8 பரமாணு | 1 திரஸரேணு. |
| 8 திரஸரேணு | 1 ரதரேணு, |
| 8 ரதரேணு | 1 வாலாக்ரம் |
| 8 வாலாக்ரம் | 1 லீக்ஷை. |
| 8 லீக்ஷை | 1 யூகை. |
| 8 யூகை | 1 யவை. |
| 8 யவை | 1 அங்குலம். |
| 6 அங்குலம் | ¼ முழம். |
| 12 ,, | 1 விதஸ்தி. (சாண்) |
| 2 விதஸ்தி | 1 முழம். |
| 4 விதஸ்தி | 1 கிஷ்கு. (½ பாகம்) |
| 2 கிஷ்கு | 1 தநுஸ். |
| 1000 தநுஸ் | 1 கோளம். |
| 2 கோளம் | 1 குரோசம். |
| 2 குரோசம் | 1 கவ்யூதி. |
| 2 கவ்யூதி அல்லது 8000 தநுஸ் | 1 யோஜனை. |

கஜ பரிமாணம் முற்றும்.



## ஆஸந லக்ஷணம்.

—o—

உத்கிருஷ்டம், மத்திமம், அவகிருஷ்டம், என. உட்காரும் விதம் மூன்று. இவைகள், முறையே, பத்திரம், மந்தம், மிருகம், இவைகளுக்குரியவைகளாம்.

யுத்த காலத்தில், மந்த, மிருக ஜாதிகளுக்கும், உத்கிருஷ்டாஸநமே சிறந்ததெனக் கூறப்படுகிறது.

நேராக உட்கார்ந்து, முழங்கால், கணுக்கால் முதலியவை களை நன்கு நீட்டி, அழுத்தமாகப்பற்றி, மூன்று வித ஆஸநங்களிலும் அழுத்தபடுத்திக்கொள்ள வேண்டும்.

யானைகளைத் தூண்டவே, முன்பக்கத்தில் ஆஸநம் கூறப்பட்டிருக்கிறது.

இருபக்கங்களிலும் கணுக்கால்களை வளைத்து, பாதத்தைத் தூக்கிப் பற்றிக்கொண்டு உட்காருவது, ஆடாமலும், தூக்கி எறியாமலும் இருப்பதற்குச் சிறந்ததாகும்.

மூன்று ஜாதி யானைகளிலும், ஸாதாரணமாகச் செல்லு கையில், மத்திமாஸநம் கூறப்பட்டிருக்கிறது.

மிருகஜாதிக்கும், ஒரே நினைவுள்ள மந்தஜாதிக்கும், தலையை ஆட்டிக்கொண்டிருக்கும் பத்திரஜாதிக்கும், திரும்பும் பொழுதும், அவகிருஷ்டாஸநம் கூறப்பட்டிருக்கிறது.

ஒரு காலை நீட்டிக்கொண்டு, மற்றொரு காலை குந்தி வைத்துக் கொண்டு உட்காருவதற்கு, "பாஸ்சாத்யபதம்" என்று பெயர். இது, ஸாதாரணமாகச் செல்லுகையில் கூறப்பட்டது.

இரு கால்களையும் இரு பக்கங்களிலும் தொங்கவிட்டு, முழங்கால்களை சிறிது மடக்கி, யானையின் முதுகில் உட்காரு வதற்கு, "உத்கடாஸநம்" என்று பெயர். உத்கடாஸநம், கூர்மாஸநம் இரண்டும், ஸந்தோஷ யாத்திரைக்குச் சிறந்தது.

இரு முழங்கால்களையும் பின்பக்கமாக மடித்து நீட்டி, யானையின் நடுமுதுகில் உட்காருவதற்கு, "மண்டூகாஸநம்" என்று பெயர். இது, சண்டைக்குச் சிறந்தது.

ஒரு காலை யானையின் கழுத்தில் நீட்டி, மற்றொரு காலை பின்புறம் மடித்து உட்காருவதற்கு, "கூர்மாஸநம்" என்று பெயர்.

ஆஸந லக்ஷணம் முற்றும்.

# அங்குசப் பிரணிதிகள்.

—— o ——

ஈஷத்ஸ்ப்ருஷ்டம், ப்ரணிதாநம், பீடிதம், திருடகாதம், என, அங்குசப்பிரணிதிகள், நான்குவிதமாகும். (அங்குசப் பிரணிதி — அங்குசத்தால், செய்ய வேண்டிய காரியத்தை யானைக்கு அறிவித்தல்.)

அங்குசத்தால் தலையைத் தொடுவதற்கு, "ஈஷத் ஸ்ப்ருஷ்டம்" என்று பெயர். அரை அங்குல ஆழம் யானையின் தலையில் அங்குசத்தை ஊன்றுவதற்கு, "ப்ரணிதாநம்" என்று பெயர்.

இரண்டு மூன்று அங்குலம் பதியும்படி, அங்குசத்தால் தலையில் ஊன்றிக் குத்துவதற்கு, "பீடிதம்" என்று பெயர்.

இரு கைகளாலும் அங்குசத்தால் அடிப்பதற்கு, "திருடகாதம்" என்று பெயர்.

அங்குசத்தை மத்தகத்தில் வைத்து, முன்பக்கம் தள்ளுவதற்கு, "க்ஷிப்தம்" என்றும், பின்பக்கம் இழுப்பதற்கு, "பிரதிக்ஷிப்தம்" என்றும், மத்தகத்தின் இரு பக்கங்களிலும் குறுக்கே திருப்புவதற்கு, "ப்ரபேதம்" என்றும் பெயர். அங்குசத்தை உயரத் தூக்கிச் சுழற்றுவதற்கு, "ஸிருணிஸம்ப்ரமம்" என்றும், அங்குசத்தால், செய்யவேண்டியதை முகத்தில் அறிவிப்பதற்கு, "ஆதிஷ்டப்ரணிதி" என்றும் பெயர்.

அங்குசப் பிரணிதி முற்றும்.

# பாதப் பிரணிதிகள்.

—— o ——

காலின் பெருவிரல், பாதமத்தியம், பாதமூலம், குதிகால், இவை நான்கும், "பாதப்பிரணிதி"களாம்.

யானையை திரும்படி செய்ய, யானைப்பாகன், பாத மத்தியங்களை காதுகளின் அடியில் ஊன்றித் தூக்கவேண்டும்.

முன் செல்லச் செய்ய, பெருவிரல்களால் காதின் பின் பக்கத்தில் ஊன்றி உந்தவேண்டும்.

பின்னிழுக்க, குதிகால்களை அழுத்திப் பின் இழுக்க வேண்டும்.

நிறுத்துவதற்குப் பின்பாதங்களால் அமுக்கவேண்டும்.

வலதுபுறம் திருப்ப, இடதுபாத முனையாலும், இடது புறம் திருப்ப, வலதுபாத முனையாலும், பக்கத்தில் தட்ட வேண்டும்.

கீழே பார்க்கும்படி செய்ய, பெருவிரல்களால் கீழ் நோக்காக அழுத்தவேண்டும்.

யானையை முகத்தை மேலே தூக்கும்படி செய்ய, காலின் பெருவிரல்களை மேனோக்காக வைத்து, அழுத்தித் தூக்க வேண்டும்.

பாதப் பிரணிதிகள் முற்றும்.



## வாக்குப் பிரணிதிகள்.

—— o ——

**வா**க்குப் பிரணிதிகள், "உபலாலனம்" "ஸம்ஞாபநம்" "ஸந்தர்ஜநம்" என்று மூன்றுவிதம்.

யானை, பயம் கோபம் நீங்கி, ஸமாதான மடைவதற்காகச் சொல்லும் வார்த்தைகளுக்கு, "உபலாலநம்" என்று பெயர்.

தெரிவித்ததை யானை செய்யத்தவறும்பொழுது, அதைத் தெரிவிக்கும் வார்த்தைக்கு, "ஸம்ஞாபநம்" என்று பெயர்.

விபரீத எண்ணத்துடன் செய்கையில் இறங்க யத்தனிக் கையில், அதைத் தடுக்க, அதட்டி பயமுறுத்துவதற்கு, "ஸந்தர்ஜநம்" என்று பெயர்.

வாக்குப்பிரணிதிகள் முற்றும்.



# தந்தச்சேத காலாதிகள்.



அசுவதி, மிருகசீருஷம், புனர்பூசம், பூசம், ஆயிலியம், மகம், உத்திரம், ஹஸ்தம், ஸ்வாதி, அநுஷம், திருவோணம், அவிட்டம், உத்திரட்டாதி, ஆகிய பதிமூன்று நக்ஷத்திரங்களில், திங்கள், புதன், வியாழன், வெள்ளிக்கிழமைகளில், ரிக்தை நீங்கிய திதிகளில், சுபலக்கினத்தில், விதிப்படி, தந்தங்களை நறுக்கவேண்டும்.

வஸந்த காலத்தில், ஞாயிற்றுக்கிழமை, வியாழக்கிழமை யில், சுபநாளில், தேவர், வேதியரை வணங்கி, தந்தத்தை நறுக்கவேண்டும்.

கயிறு, ரம்பம், இரும்பு முளை, இவை அவசியமான, ஸாதனங்களாம்.

நதி தீரங்களில் வஸித்த கஜங்களுக்கு, மூன்றுவது வயதில் ஆறு அங்குல நீளமும், மலைகளில் வஸித்த கஜங்களுக்கு, ஐந்தாவது வயதில் ஐந்து அங்குல நீளமும், மிச்ர கஜங் களுக்கும் கிரி நதீ தீர கஜங்களுக்கும், ஐந்தாவது வயதில், நான்கு அங்குலமும், தந்தங்களை நறுக்கவேண்டும்.

கிரிஜாத கஜங்களுக்கு நேத்திர மத்தியிலிருந்தும், நதீ தீரஜாதங்களுக்கு கண்ணின் அடிப்பாகத்திலிருந்தும், கும்ப மத்தியம்வரை அளந்து, அதை தந்தத்தில் வைத்து, அதற்கு மேல் நீண்டிருக்கும் தந்தத்தை நறுக்கிவிடவேண்டும்.

துவிதீயை முதல், அஷ்டமி வரையுள்ள, திதிகளில், அதி சுபமுஹூர்த்தத்தில், கஜ சிகித்ஸையும், நல்ல பயிற்சியும் பெற்ற வைத்தியன், முதல்நாள் இரவு உபவாஸமிருந்து, மறுநாள் காலையில், ஸ்நாநாதிகள் செய்து, தூய உடை தரித்து, ஹோமம், பலி, பிராம்ஹண ஸந்தர்பணம் செய்து, யானைக்கு தூபம் காட்டி, சந்தனம், புஷ்பமாலைகளால் பூஜித்து, யானையை கிழக்கு அல்லது வடக்கு முகமாக உட்காரவைத்து, முதலில் சுத்த ஜலத்தால் தலைக்குக் கீழ்பாகத்தை நனைத்து, ரத்தனங்களையும் விதைகளையும் தந்தாக்கிரபாகத்தில் கட்டி, குளிர்ந்த ஜலத்தால் தந்தங்களை நனைத்து, முதலில் வலது தந்தத்தையும், பிறகு இடது தந்தத்தையும் நறுக்கவேண்டும். வலது தந்தத்தை நறுக்குவதால் ஜயம் உண்டாகும்.

ஸப்தமியும், நவமி முதலிய திதிகளும், கூடவேகூடாது. தந்தம், பூமியில் விழுந்துவிடாமல் இரு கைகளாலும் பிடித்துக் கொள்ளவேண்டும். பூமியில் விழுந்தால், இராஜ்ஜியம் அழியும்.

தந்தத்தின் வெட்டுவாய், ஸ்வர்ணம், வெண்தாமரை, தேன், கபிலதிராக்ஷை, இவைகளின் நிறமாக இருந்தால், அரசன், நான்கு கடல்கள் சூழ்ந்த பூமியை ஆளுவான்.

புகைநிறமாகவோ, புகைநிறப் பூக்களின் வடிவமாகவோ காணப்பட்டால், வாகனங்கள் அழியும்.

வெட்டுவாய், சந்தனம், அகில், நினைக்கப்பட்ட பூமி, இம்மணமுடையதாக இருந்தால், ஜயம், ராஜ்யவிருத்தி, பூலாபம், இவையுண்டாம்.

பாதிரிப்பூ, நீலம், தாமரை, இம்மணமுடையதானல், க்ஷேமமுண்டாம். மாலைகளின் மணமுடையதானல், அர்த்த ஸித்தியுண்டாம். காய்ந்த கோமய மணமுடையதானல், கோவிருத்தியுண்டாம்.

துர்நாற்றம், ரக்த நாற்றம், உள்ளதானல், மஹாபய முண்டாகும். சவநாற்றமுடை யதானல், ராஜ்யத்தில் பஞ்சமும் வியாதியுமுண்டாகும்.

தந்தங்களின் வெட்டுவாயில், ஆபரணங்கள், ஸ்வஸ்திகம், கண்ணடி, போன்ற வடிவம் காணப்பட்டால், யாத்திரை இனிது முடியும்.

மாளிகை, சக்தியாயுதம், பில்வமரம், வர்தமாநம், (மாளிகையின் ஒருவித அமைப்பு) போல் காணப்பட்டால், கண்டையில் வெற்றியும், தேசாபிவிருத்தியுமுண்டாகும்.

படுக்கைபோல் காணப்பட்டால், ஸ்திரீ லாபமும், ஸந்தோஷமும், உண்டாகும்.

முதலை, சிப்பி, சங்கு, தாமரை, நீலம், இவைகளைப்போல் காணப்பட்டால் மேன்மையுண்டாகும்.

எண்ணைப்பசை, ஈரநைப்பு காணப்பட்டால், பூமி நாசமுண்டாம்.

கருப்பு அல்லது நீலநிறப் பூக்களைப்போல் காணப்பட்டால், பெரும் பயமுண்டாகும்.

புகைநிறப் பூக்களைப்போல் காணப்பட்டால், வாகநங்கள் அழியும்.

குரங்கு, பன்றி, கருநாகம், இவைகளைப்போல் காணப்பட்டால், இராஜ்யம் கைவிட்டுப் போய்விடும்.

பூஜார்ஹமான யானைகளின் தந்த மத்தியங்களில், பவழம், மணி, ரத்தினம், முத்து, வைரம், வைடூரியம், இவைகளைப் போல் காணப்படுவதும் உண்டு. (அவை மிகவும் சிறந்தவைகளாகும்.)

பில்வமரம். மாளிகை, குடை, துவஜம், சாமரம், இவைகளைப்போல் காணப்பட்டால், ஆரோக்கியம், ஜயம், தனவிருத்தி, ஸௌக்கியம் இவையுண்டாகும்.

ஆயுதங்களைப் போன்ற வடிவங்கள் காணப்பட்டால், ஜயமும், நந்தியாவர்தங்களைப் போல் காணப்பட்டால், கைவிட்டுப்போன தேசமும், கிடைக்கும்.

தந்தச்சேத காலாதிகள் முற்றும்.



# தந்தாகாத லக்ஷணம்.

—— o ——

பதிநான்கு வித தந்தாகாதங்களை அறிந்த யானை, போரில், பகை யானையால் கொல்லப்படமாட்டாது. (ஆகாதம்—இடித்தல்.)

ஸங்காதம், (1) உல்லேகம், (2) பரிலேகம், (3) கர்தரீ, (4) தலகாதம், (5) பார்சுவகாதம், (6) ஆராகாதம். (7) ஸூசீ காதம், (8) தோடகம், (9) ஸந்திகம், (10) கசாகாதம், (11) விருக்ஷாகாதம், (12) நிர்காதம் (13) மிச்ரகம், (14) என்று, தந்தாகாதங்கள், பதினான்கு விதமாகும்.

ஒன்றோடொன்று முகங்களை உராய்ந்து கொள்ளுவதற்கு, "ஸங்காதம்" என்று பெயர்.

முகத்தில் தந்தங்களால் இடித்துத் தடுப்பதற்கு, "உல்லேகம்" என்று பெயர்.

தந்தத்தைக் குறுக்காகக் கொடுத்துத் தூக்கிக் குத்துவதற்கு, "பரிலேகம்" என்று பெயர்.

இரு பக்கங்களிலும் இரு தந்தங்களாலும் குத்துவதற்கு, "கர்தரீ" என்று பெயர்.

தந்தவட்டம், உதடுகளில் தந்தங்களால் குத்துவதற்கு, " தலகாதம் என்று பெயர்.

பக்கவாட்டில் சாய்த்துக் குத்துவதற்கு, "பார்சுவகாதம்" என்று பெயர்.

பக்கங்களில் நேராக தந்தங்களால் குத்துவதற்கு, "ஆராகாதம்" என்று பெயர்.

துதிக்கை நடுவில் குத்துவதற்கு "ஸூசீகாதம்" என்று பெயர்.

தலையைக் குறுக்கே பிடித்து இழுத்து, ஒரு தந்தத்தால் குத்துவதற்கு, "தோடகம்" என்று பெயர்.

கோபங்கொண்டு, திட்டாணியிலேறி, சிங்கம்போல் பகை மீது பாய்ந்து அடிப்பதற்கு, "ஸந்திகம்" என்று பெயர்.

முகத்தைச் சாய்த்துத் தூக்கிப் பகையை அடிப்பதற்கு, "கசாகாதம்" என்று பெயர்.

இரு தந்தமத்தியிலும், இரு தந்தங்களைப் பதியவைத்து, அடிப்பதற்கு, "விருக்ஷாகாதம்" என்று பெயர்.

உடலைப் பின்சுருக்கி முன் பாய்ந்து அடிப்பதற்கு, "நிர்காதம்" என்று பெயர்.

இவை யாவும் கலந்திருப்பதற்கு, "மிச்ரகம்" என்று பெயர்.

யானை, போரில், ஆயிரக்கணக்கான பதாதிகளைக் கொல்லும், யானையிலேறி சண்டை செய்பவன், ஆயிரக் கணக்கான ரதங்களையும் குதிரைப்படைகளையும் கொல்லுவான்.

தந்தாகாத லக்ஷணம் முற்றும்.

# மதசோபா லக்ஷணம்.

—o—

ஸங்காதருதிரம், (1) பிரதிச்சிந்நம், (2) பக்ஷலேபிநீ, (3) தாதுஸாமியம், (4) ஸமகக்ஷை, (5) சோபாகரீ, (6) துரோணிகை, (7) என்று, மதசோபைகள் ஏழு விதங்களாகும்.

மதங்கொண்ட யானைகளின் லக்ஷணங்கள் :—

துதிக்கை, காது, முகம், வால், இவைகளை, ஆட்டிக் கொண்டே இருக்கும்.

கடைவாய், நாக்கு, தாடை, முலைக்காம்பு, கண், இவை கள் சிறிது பருத்து, நாள்தோறும் கொஞ்சம் கொஞ்சமாகப் பருத்து, நன்கு சிவந்து, வட்டமாக இருக்கும். இதற்கு, "ஸங்காதருதிரம்" என்று பெயர்.

தந்தமத்தியம், மணிக்கட்டு, மார்பு, கழுக்கட்டை, இவை களில், மாமிசம் விருத்தியடையும். இதற்கு, "பிரதிச்சிந்நம்" என்று பெயர்.

ஸந்திகள், முகம், விலாப்புறம், இவை பருத்துச் சுருக் கங்கள் நீங்கும். இதற்கு, "பக்ஷலேபிநீ" என்று பெயர்.

கழுக்கட்டை, கழுத்து, தந்தங்களின் இரு பக்கங்கள், இவை வீங்கும். இதற்கு, "தாதுஸாமியம்" என்று பெயர்.

முதல் மூன்று சோபைகளைக் காட்டிலும், இந்த நான்கா வது சோபை, சண்டைக்கும், விநோதத்துவநிக்கும் சிறந்தது. இதற்கு "ஸமகக்ஷை" என்று, மற்றொரு பெயருமுண்டு.

முதுகெலும்பு ஸமமாகும், வயிறு, விலாப்புறங்களின் மடிப்புகள் மறையும். பெரும் சத்தம் போடும். மெதுவாக நடக்கும். நீண்டமூச்சு விடும். சோம்பலுள்ளதாம். இதற்கு, "சோபாகாரீ" என்று பெயர். "ஸமகக்ஷை" என்றும் பெயருண்டு.

நடக்கும்பொழுது, மாமிசங்கள் ஆடும். இதற்கு, "சலிதை" என்று பெயர்.

முதுகெலும்பு, நிமிர்த்திப்போட்ட வாழையிலையின் நடு நரம்புபோல் பள்ளமாக இருக்கும். இதற்கு, "துரோணிகை" என்று பெயர்.

கீழே கூறப்பட்ட ஏழு சோபைகளிலும், ஏழு அவஸ்தை கள் கூறப்படுகின்றன. இவைகளுக்கு, முறையே, வித்தி, (1) திலகிதம், (2) தூஷிதா, (3) ஆரூடவசாநுகம், (4) குரோதிநீ, (5) சலிதா, (6) அதிவர்திநீ, (7) என்று பெயர்.

சோபை உண்டான, ஐந்து, எழு, பன்னிரண்டாம் நாள், மதாவஸ்தை உண்டாகும். பிருஷ்டம், ஆண்குறி, இவை ஸம நிலையில் இருக்கும், கண் கொஞ்சம் சிவந்திருக்கும். நல்ல அழகு பெண் யானையைத் தேடுதல், ஆண் யானைகளையும் முகருதல், சிறந்த அறிவு, யானைகளைக் கோபித்தல், அடித்தல், தந்தங்களால் மரங்களை நாசம் செய்தல், புழுதியில் விளையாடும் ஆசை, அகாலத்தில் சத்தமிடுதல், இவைகள், "வித்தி" என்னும் முதல் மதாவஸ்தையில் காணப்படும்.

சிறிது நேரமே தூக்கம், ரோஷம், நின்றுகொண்டே கொட்டாவி விடுதல், இவைகள், "கோபாவஸ்தை" என்னும் இரண்டாவது மதாவஸ்தையில் காணப்படும். இந்த அவஸ்தையில் அடிக்கடி கொட்டாவிவிடும், ஆகையால் இதைவிட்டு விலகி இருக்கவேண்டும்.

தவிரவும், கட்டுமூளைக்கு வராது, படுக்காது, முதுகைப் பிடித்துக்கொண்டு கழுத்தை நீட்டும். நல்ல வலுவும், நன்றாக நடக்கும் ஆற்றலுமுள்ளதாம். கன்னம், கண், முகம், இவைகள் வீங்கியும், அழகாயுமிருக்கும். வேரையும் பிடுங்கும். நாஸிகையில் நீரைத் தேக்கிக்கொள்ளும். இடுப்பில் முத்தமிட்டுக் கொள்ளும். அடிக்கடி கோணப் பார்வை பார்க்கும். கோபத்துடன் வேகமாகக் கிட்டே வரும். கோபத்தால் கடைவாயை நக்கிக்கொள்ளும். வெகு சீக்கிரத்தில் மதமடையும் யானை, எதையும் நாசம் செய்யும். ஸந்தோஷமுடையதாம். கண்களில் பொட்டுக்கள் போல் மதஜலம் காணப்படும். அதைக்கண்டு முதலில் கோபமடையும்.

முகத்திலும், கன்னங்களிலும், ஓட்டையளவு மதஜலம் காணப்படும். நாசியில் நீர் வடியும். பயமற்றதாம். இதற்கு, "நிர்பயம்" என்று பெயர்.

நடையிலும், ஆகாரம் செய்யும் பொழுதும். கன்னங்களில் மதம் சிந்தும். இதற்கு, "தாநவான்" என்று பெயர். மதத்தால் அலுப்படையும்.

இரு கண்களிலும் மதஜலம் பெருகிக்கொண்டே இருக்கும். இதற்கு, "தராஷிதை" என்று பெயர்.

கீழே கூறப்பட்ட லக்ஷணங்களுடன் இடிமுழக்கம்போல் கர்ஜிக்கும். இந்த அவஸ்தைக்கு, "அதோநுபந்திநீ" என்று பெயர். இது மூன்றாவது அவஸ்தையாகும்.

மதஜலம் அதிக மணமுள்ளதாம். மதத்தின் நடுநிலையை அடைந்திருக்கும். ஸந்தோஷமும், கோபமும் நடுநிலையிலிருக்கும். விளையாட்டிலும், சண்டையிலும் ஸாமர்த்திய முள்ளதாம். எல்லா ஜீவராசிகளையும் கொல்ல நினைக்கும். பாகனுக்கு அடங்கி நடக்கும். இதற்கு, "ஆரூடவசாநுகம்" என்று பெயர். இது நான்காவது அவஸ்தையாகும்.

நறுமணமுள்ளது. அரசர்களுக்கு வாகனமாகத்தக்கதாம். எப்பொழுதும், கடைக்கண் சிவந்திருக்கும். உணவை வெறுக்கும். கொல்ல நினைக்கும். காது, கண், முலை, கன்னம், தாடை, துதிக்கை, ரோமஹர்ஷம் கோசம், ஆகிய எட்டு இடங்களிலும், எப்பொழுதும் மதஜலம் வடியும். பாகனுக்கு அடங்காது. ஐந்தாவது அவஸ்தையான இதற்கு, "க்ரோதிநீ" என்று பெயர்.

இரவில் பரபரப்புடன் சுற்றித் திரியும். கோபத்தால் கட்டுமுளைக்கு வராது, தூக்கம், பசி, தெரியாது. கண், காதுகளில் அதிகமாக மதம் பெருகும். மதம் கீழே வடியும், இது, "சலிதா" என்னும் ஆறாவது மதாவஸ்தையாகும்.

மதம் அதிகமாகப் பெருகி ஓடும். மாமிசபுஷ்டி குன்றி, எலும்புக்கூடாக இருக்கும். அங்குசாதி பிரணிதிகளைப் பொருட்படுத்தாது. நிழலையே கொல்ல விரும்பும். ஒன்றுக்கும் அடங்காது. இது, "அதிவர்திநீ" என்னும் ஏழாவது அவஸ்தையாகும். இந்த அவஸ்தையில், ஒன்றையும் பார்க்காது. அறியாது, கேட்காது, ஒரு இடத்திலும் நிற்காது. மதம் எல்லையை மீறிவிடும். இதன் மதகந்தம் மிகக் கொடியதாகும்.

ஆகையால், ஏழாவது அவஸ்தையை அடையவிடாமல், ஆருவது அவஸ்தையிலேயே, மதத்தை (சிகித்ஸையால்) நிறுத்த வேண்டும்.

மதசோபா லக்ஷணம் முற்றும்.

# பாஹியாளி ப்ரகரணம்.

அரசன், மதம் பிடித்த யானைகளைப் பந்தயத்திற்கு விடும்படி, பாகர்களுக்குக் கட்டளையிட வேண்டும், வீரமுண்ட வாத்தியம், உடுக்கை, யானைமணிகளை ஒலிக்கச் செய்ய வேண்டும். இரவு முதல் யாமத்தில் வீரமுண்ட வாத்தியம் ஒலிக்க, யானைகளைச் சுற்றிலும் வீரர்கள் நின்றுகொண்டு, சிங்கநாதம் போல் கர்ஜிக்க வேண்டும்.

அதைக்கேட்ட அரசன், அவர்கள் சிங்காரித்துக்கொள்ள வெண்பட்டாடைகளைக் கொடுத்து, யானைகளை அலங்கரிக்க நல்லெண்ணையும் செந்தூரமும் கொடுக்க வேண்டும்.

செம்பஞ்சு, செவ்வரளிகளால், கோபோத்தீபநபிண்டம் செய்து வைக்க வேண்டும்.

யானை தூங்குவதற்காக, தூக்கத்தின் துவக்கத்திலும், முடிவிலும், நிறையத் தாமரைத் தண்டுகளைக் கொடுக்க வேண்டும்.

பிறகு, யானையின் நிலைமைக்குத் தக்கபடி, உத்தீபந பிண்டகத்தை, பாகனைக்கொண்டு, கொடுக்கச் செய்யவேண்டும்.

மந்தஜாதியை வெய்யிலிலும், பத்திரஜாதியை வெய்யிலும் நிழலுமான விடத்திலும், மிருகஜாதியை நிழலிலும் கட்டிவைக்க வேண்டும்.

சண்டையன்று, தீனியும் தண்ணீரும் வைக்கவேண்டும்.

யானையின் மத்தகத்தில் சிந்தூரத்தால் அலங்கரித்துப் பொட்டிட்டு, நல்லெண்ணையைக் கடையிலும் பிருஷ்ட பாகத்திலும் தடவி, விநோதஸ்தாநத்தின் பக்கத்தில், ஒன்றுக்கொன்று சிறிது தூரத்தில், முளைகளில் கட்டிவைக்க வேண்டும்.

யானைகளின் விளையாட்டிற்குரிய இடம், நூறு நருஸ்ஸு நீளமும், அறுபது தருஸ்ஸு அகலமும் இருக்கவேண்டும். முளைகள், குழிகள், கற்கள், முற்கள் புழுதி, கரடுமுரடு, மேடுபள்ளம், இவைகளில்லாமல், முன்பக்கம் உயரமாக அமைக்கவேண்டும். சுற்றிலும், கும்பங்களாலலங்கரித்து, இரு இடங்களில், யந்திரங்கள் பொருந்திய இரு வழிகள் வைக்க வேண்டும். அவ்வழிகளின் வெளிப்பக்கத்தில் வளைவுகள்கட்டித் துணிமணிகளால் அலங்கரிக்க வேண்டும். அவ்வழி கிழக்கு, அல்லது வடக்கு முகமாக இருக்க வேண்டும்.

கிழக்கு முகமான வழியின் தென்பக்கத்தில், ஆலோக மந்திரம், கட்டவேண்டும்.

அக்கட்டிடம், உட்கார உயர்ந்த மேடை, பின்புறம் சுவர், விசித்திரமான தூண்கள், வர்ணவிதாநம், அழகிய கற்களால் அமைந்த திட்டாணி, யானைகளின் சித்திரங்கள், இவைகளுடன், அழகாகவும், விசாலமாகவும் இருக்க வேண்டும்.

அதைச் சுற்றிலும் அகழும், அகழைத் தாண்டப், பலகைகளாலான வழியும், உயர ஏறுவதற்கு ஏணிப்படிகளும வைக்கப்பட்டிருக்க வேண்டும். இது, யானைகளைத் தடுக்கும் இடமாகவும் இருக்கவேண்டும்.

இந்த அகழுக்கு வெளியில், தென்பக்கத்தில், சிறிது மேற்கே தள்ளி, மற்றொரு கட்டிடம் கட்டவேண்டும், அதுவும், அகழால் சூழப்பட்டு, முன் கூறப்பட்ட கட்டிடத்தைப்போலவே இருக்க வேண்டும்.

முன்கூறப்பட்ட ஆலோகமந்திரத்திற்கு எதிரில், யானை களின் விளையாட்டு இடம் அமைந்திருக்க வேண்டும்.

இதன் இரு பக்கங்களிலும் எட்டுத் தூண்களை நட்டு, அவைகளில் பருத்து நீண்ட தாப்பாள்களை, யானையின் மார் மட்டத்திற்கு இடைவழிகளிருக்கும்படி இசைக்க வேண்டும்.

அதன் வெளிப்புறத்தில், அதேபோல மற்றொரு வீதியும் நிர்மாணம் செய்து, அதில் பல வழிகளும், தாண்டிச்செல்ல பல ஸாதனங்களும் வைக்க வேண்டும்.

பாஹியாளிப் பிரகரணம் முற்றும்.

# கஜ விநோதம்.

யானைத் தலைவன், எல்லாம் ஸித்தமாக இருப்பதாகத் தெரிவித்தவுடன், அரசன், தேவதா பூஜை செய்து விட்டு, பட்டணத்தின் ராஜவீதிகளிலும், நாச்சந்துகளிலும், பறை சாற்றும்படி செய்யவேண்டும். கட்டுத்தறித்த யானைகள் நிலைதப்பி ஓடும், ஆகையால் தொந்தி பெருத்தவர்கள், கர்ப்பிணிகள், குழந்தைகள், கால் ஊனமானவர்கள், அங்கக் குறைவுள்ளவர்கள், விளையாட்டைப் பார்க்க ஆவல்கொண்டு, வெளியே வரக்கூடாது, குறுக்கே போகவும் கூடாது.

வேகமாக ஓடும் ஆற்றலுள்ளவர்கள், பண ஆசை யிருந்தால், யானையை விரட்டி ஓடலாம், என்றும் பறை சாற்றவேண்டும்.

யானையை, உசிப்பிவிட்டு, ஓடுகிறவர்களில், உத்தமன், மத்திமன், அதமன், என மூன்றுவிதம். இது வேகத்தைப் பொருத்தது.

யானையின் ஸஞ்சாரத்திற்காக ஒதுக்கப்பட்ட பூமியை மூன்று கூறுகளாச் செய்து, யானை நிற்குமிடம் முதல் பூமி, அரசன் இருக்குமிடம் இரண்டாவது பூமி, உசிப்புகிறவன் இருக்குமிடம் மூன்ருவது பூமி, என்று கொள்ளவேண்டும்.

யானையை உசிப்பி இரண்டாவது பூமிக்குக் கொண்டு வந்து, அங்கிருந்து, முதல் பூமிக்கும் உசிப்பிவந்து தப்பி ஓடுகிறவன், உத்தம வேகமுடையவனுவான்.

யானையை மத்திம பூமியில் விட்டு விட்டு ஓடுகிறவன், மத்திமனுவான்.

யானை நிற்கும் பூபாகத்திலேயே உசிப்பிக் கிளப்பிவிட்டு ஓடிவிடுகிறவன், அதமவேகம் உடையவனுவான்.

முதலடி எடுத்துவைத்த பின் தப்பி ஓடுகிறவன், சிறந்த வேகமுடையவனுவான். இது குதிரை வீரனுக்கும் பொருந்தும்.

இவ்வளவு தூரத்திலிருந்து உசிப்புகிறவன், வேகமாக ஓடுகிறவனுனுலும், அவனை, யானை, பதினைந்தாவது அடியில் பிடித்துக் கொன்றுவிடும். ஆகையால் யானை மிகச் சிறந்த வேகமுள்ளதாகும்.

மத்திம வேகனை பத்தாவது அடியிலேயே வீழ்த்திவிடும்.

ஆகையால், உத்தமஜவன் மத்திம பூமிக்கும், மத்திம ஜவன் அதம பூமிக்கும், அதம ஜவன் தனது பூமிக்கும், ஓடிவிடலாம். தானிருக்குமிடம் வரை யானையை உசிப்பி வருகிறவன், உத்தம ஜவனுவான்.

இவ்விதம், மிக வேகமாக ஓடுகிறவனும், கொல்லப்பட்டு விட்டால், யானையே ஜயித்ததாகும்.

குற்றம் செய்த பாகன், யானைக்குமுன் ஓடிப்பிழைத்தால், அவன் குற்றமற்றவனுவான், கொல்லப்பட்டுவிட்டால், பாப மற்றவனுவான்.

யானைக்குமுன் ஓடும் குதிரைவீரனுடைய, அல்லது குதிரையின் முதுகில், யானையின் துதிக்கை ஜலம் விழுந்து விட்டால், வீரனுக்கு ஜயமில்லை. (யானையே ஜயித்ததாகும்).

கஜ விநோதம் முற்றும்.



# ஸிருணி காத லக்ஷணம்.



அங்குசத்தின் படங்கால் அடிப்பதற்கு, "தாடிதம்" என்றும், வேமாக அடிப்பதற்கு, "தோதம்" என்றும், இரு கைகளாலும் ஓங்கியடிப்பதற்கு, "உத்க்ஷிப்தம்" என்றும் பெயர்.

கும்பங்களின் மத்தியம், (1) முன்வாட்டம், (2) பக்க வாட்டம், (2) கும்பங்களை ஒட்டிய நெற்றிமேடு, (1) காதுகள், இவைகளின் ஸந்திகள், (2) காதுகளின் முன்பக்கம் ஸந்திகள், (2) பின் ஸந்திகள், (2) ஆகப் பன்னிரண்டிடங்கள், அங்குசாகாத ஸ்தாநங்களாகும்.

யானையை முன்னே செலுத்த, அங்குச முனையால் அடிக்காதில் குத்தவேண்டும்.

பின்வாங்கச் செய்ய, கும்பங்களின் முன்வாட்டம், நெற்றி மேட்டில் அங்குசத்தை மாட்டிப் பின் இழுக்க வேண்டும். இதற்கு, "அபகர்ஷம்" என்று பெயர்,

பலம் மிக்க வீரனை யானை தள்ளிவிடும். வீரன், யானையைத் தள்ளிவிடுவான். யானை, வீரனையும் தள்ளிவிடும். ஸாமர்த்திய முள்ளவன், தண்டத்தால் யானையை வசப்படுத்துவான். ஸாமர்த்தியமற்றவன் அபஜயமடைவான்.

ஸிருணிகாத லக்ஷணம் முற்றும்.

கஜ சாஸ்திரம் முற்றும்.



கணபதி துணை.

# கஜ சாஸ்திரானுபந்தம்.



## யானைப்படையின் பெருமை.

--- 0 ---

யானைகள் வெற்றியின் உருவமாகும், சொன்னதைச் செய்யும். மனமறிந்து நடக்கும். கோட்டை முதலியவைகளை வஜ்ஜிராயுதம்போல் நாசம் செய்யும். யானைக்கு மேலான வாகனமில்லை. யானையற்ற சேனை. அரசனற்ற ராஜ்ஜியம் போலாகும். மனிதனோ, குதிரையோ, ஒரே ஆயுதத்தால் உயிரிழக்கும். யானையோ ஆயிரக்கணக்கான ஆயுதங்களையும் பொருள் செய்யாது. தன் சேனையைக் காத்து பகை பலத்தை நாசம் செய்யும். ஒரு யானை அறுபதினாயிரம் குதிரைகளை வெல்லும். யானையால் உயிரிழந்த வீரர்கள் ஸ்வர்க்கம் செல்லுவார்கள். ஆகையால், லக்ஷணமுள்ள யானைகளைப் பிடித்துப் பழக்கி படையில் சேர்த்துவைக்க வேண்டும்.

யானைப்படையின் பெருமை முற்றும்.



## கஜ கிரஹண காலம்.

--- 0 ---

சிறந்த திதி வார நக்ஷத்திரங்களில், சுபதிருஷ்டியுள்ள முஹூர்த்தத்தில், பிடித்த யானைகள், நன்மையைக் கொடுக்கும். சூரியனால் பார்க்கப்பட்ட முஹூர்த்தத்தில் முடிக்கப்பட்ட யானை, பராக்கிரமமுடையதாகும். பகையை வெல்லும்.

கூடாத திதி – வார – நக்ஷத்திரங்கள். பக்ஷஸந்தி, மாஸச் சித்திரம், ஸந்தியாகாலம், பகல், இவைகளில் யானைகளைப் பிடிக்கக்கூடாது. இவைகளில் பிடிபட்ட யானைகள் லக்ஷணமும் பலமும் படைத்ததானாலும், இறந்துவிடும்.

கஜ கிரஹணகாலம் முற்றும்.

## பிடிக்கத்தகாத யானைகள்.

அங்கம் குறைந்தது, அதிக அங்கமுடையது, தோள் முறிந்தது, கிழடு, தந்தம் தொங்கியது, தொங்கும் அண்டகோசமுள்ளது, விகாரமான அங்கங்களுள்ளது, அலி, சூளுற்றது, குட்டியுடையது, மஹாலக்ஷணங்கள் பொருந்தியது, தெய்வத்தன்மையுடையது, வெளுப்பு — சிகப்பு — சூரியன் – குசம் – மயில் தோகை – இவைகளின் நிறமுள்ளது, நான்கு தந்தங்களுடையது, இவைகளைப் பிடிக்கலாகாது. இவை காட்டிலிருந்தால், க்ஷேமமும், ஆரோக்கியமும், நல்ல மழையுமுண்டாகும்.

கந்த கஜங்களையும் அடக்கி நடத்தும் ஆற்றலுள்ள யூதபதியானது, சிறுவயதானாலும், அதைப் பிடிக்கக்கூடாது.

யானைகளைக் கொல்லும் பாதகர்களை, அரசன் கொன்றுவிட வேண்டும். யானைகள் தெய்வாதீனமாக இறந்தால், அவைகளின் தந்தங்களை, அரசன் எடுத்துவர வேண்டும்.

பிடிக்கத்தகாத கஜங்கள் முற்றும்.

# கஜ வயோ நிர்ணயம்.

—— o ——

தந்தம், நகம், மயிர், கண்கள், மனோஹரமாயும், துதிக்கை, வால், காதுகள் நீண்டும், மத்தகம் அழகாகவும், முன்னுடல் லக்ஷணமாகவுமுள்ள யானைகள், வெகுகாலம் ஜீவித்திருக்கும்.

துதிக்கை – விரல் – நாக்கு – கீழுதடு – கன்னம் – கோசம்- ஆஸநதுவாரம், இவ்வேழு இடங்கள் சிவப்பாகவும், இரு மத்தகங்கள், இரு தந்தங்கள், முதுகெலும்பு, முகம், இவ்வாறு இடங்களும் உயர்ந்துமிருக்கும் யானைகள், வெகுகாலம் ஜீவித்திருக்கும்.

ஸகல லக்ஷணங்களும் பொருந்திய யானைகள் கிடைப்பது அரிது. ஆயிரத்தில் ஒன்று இத்தகைய லக்ஷணங்கள் பொருந்தியதாக இருக்கக் கூடும்.

எனவே, மூன்று லக்ஷணங்களுக்கு மேல் எட்டு லக்ஷணங்கள் வரையில் பொருந்தியுள்ள யானைகளுக்கு, ஏற்றவாறு ஆயுஸ்ஸை நிர்ணயம் செய்யவேண்டும்.

சிறந்த மூன்று லக்ஷணங்களுள்ள கஜங்கள், மூன்று, அல்லது நான்கு தசைகளும், நான்கு லக்ஷணங்கள் உள்ள கஜங்கள், நான்கு, அல்லது ஐந்து தசைகளும், ஐந்து லக்ஷணங்களுள்ளவைகள், ஐந்து, அல்லது ஆறு தசைகளும், ஆறு லக்ஷணங்களுள்ள கஜங்கள், ஏழு, அல்லது எட்டு தசைகளும், ஏழு லக்ஷணங்கள் உள்ளவைகள், ஒன்பது, அல்லது பத்து தசைகளும், எட்டு லக்ஷணங்கள் உள்ளவைகள், பதினொன்று அல்லது பன்னிரண்டு தசைகளும் ஜீவித்திருக்கும்.

ஆயுள் விஷயத்தில் முன்னுடல் லக்ஷணங்களையே கவனிக்கவேண்டும்.

பத்திரஜாதிக்கு பன்னிரண்டாவது தசையும், மந்தஜாதிக்கு எட்டாவது தசையும், மிருகஜாதிக்கு நான்காவது தசையும்,

பரமாயுளாம். மிச்சிரஜாதியின் ஆயுளை, யோசித்துக் கூற வேண்டும்.

லக்ஷணக் குறைவு, நக்ஷத்திர தோஷம், கிரஹபீடை, இவைகளால் அல்ப ஆயுளுள்ளதாகும்.

மிருகஜாதி நன்னிடத்திலும், மந்தஜாதி ஆஹாரம் செய்யும்பொழுதும், பத்திரஜாதி ஜலத்திலும், மரணமடையும்.

முதல் முப்பது வருடம் வரையில் வளரும் வயதாகும். அறுபது வருடம் வரையில் தேற்றமான வயதாகும், பிறகு, குன்றும் வயதாகும், என்று கூறப்படுகிறது.

இவைகளை, வர்தமானம் — ஸ்திதம் — க்ஷயம் — என்றும், உதயம் — உதர்கம் — ஈஹமானம் — என்றும், கூறுகின்றனர்.

உணவின்மை, அங்குசவேதை, அவமதிப்பு, இவைகளால், யானைகள் மரணமடைகின்றன.

இந்த வயோநிர்ணய முறை, யோகிகளும் வியக்கத்தக்கது. அறிவாளிகள் போற்றத்தக்கது.

கஜ வயோ நிர்ணயம் முற்றும்.

# ஹஸ்திநீ லக்ஷணம்.

—o—

எடுப்பான மத்தகம், பாகுபாடுடைய முலைகள், அழகான மயிர், சிட்டுக்குருவிக்கண், தோஷமற்று மனோஹரமான நகம், விரிந்த மார்பு, பெரிய பிருஷ்டபாகம், அழகிய அல்குல், அழகான நடை, செந்தாமரை இதழ் - சிஞ்ஜல்கம் போன்ற நிறம், ஆகிய லக்ஷணங்களுள்ள பெண் யானை, யூதபதியைப் பெறும். இதைப் பெற்றுள்ள அரசன், ஸ்திரீ பாக்கியமுள்ளவனாவான், பெண் யானைகளைப் பருவகாலங்களில் பூஜிக்க வேண்டும்.

முழங்காலில் கிலாஸமும், (கிலாஸம் - குஷ்டம்) துர் நாற்றமும், கபில நிறமும் உள்ள பிடி, பகையை வளர்க்கும்.

பருத்த புஜமத்தியம், நீண்ட முகம், தொங்கிய சதை, பருத்த துதிக்கையும் நகமும், குட்டைக் காது, கோணல் மயிர், ஸர்ப்பக்கண், விரிவற்ற காது, இவைகளையுடைய பெண் யானையைப் பிடிக்கலாகாது. இது, பொக்கிஷம், அந்தப்புரம், வாஹநம், நகரம். தேசம், எல்லாவற்றையும் அழித்துவிடும்.

ஹஸ்திநீ லக்ஷணம் முற்றும்.

# கர்ப்பிணீ கிரஹண நிஷேதம்.

சூலுற்றதையும் குட்டியுள்ளதையும் பிடிக்கலாகாது. அது, காடுகளில் இஷ்டம்போல் திரிவதே நல்லது. அதைப் பிடித்தால், யூதத்தையும் யூதபதியையும் விட்டுப் பிரிந்து, கட்டுண்டு, வேலைசெய்து, கோபத்தால் சபிக்கும். அதனால் மனைவிகள் மடிவர்.

கிராமங்களில் யானைகள் புணருவதும், குட்டிபோடுவதும் கூடாது. அதனால் கர்ப்பிணிகள் அழிவார்கள். உள்நாட்டில் கலகம் உண்டாகும். ஆறு மாதத்தில், மனைவி — மக்கள் — வாஹநங்கள் — படைபலம் — அரசாங்கம்—அரசன்--எல்லாம் அழியும்.

கர்ப்பிணீ கிரஹண நிஷேதம் முற்றும்.

# கர்ப்பிணீ லக்ஷணம்.

—— o ——

யானைகளுக்கு ரஜஸ்ஸு உட்புறமே கசியும். வெளியே தெரியாது.

பிடிகள், பன்னிரண்டு முதல் ஐம்பது வயது வரையில் கர்பந்தரிக்கும். ஒன்பதாவது வயதில் ரஜஸ்ஸு உண்டாகும். நன்கு வளர்ந்தது ஒன்பதாவது வயதிலேயும் கர்ப்பந்தரிக்கும்.

களங்கமற்ற சோபை, இந்திரியம் கலந்த மூத்திரத்தால் நினைந்து பறுத்து விரிந்த யோநி, யானை பிடியுடனிருப்பதைக்கண்டு வெறுப்பு, யூதத்தைவிட்டுச் செல்லுதல், புழுதி - சேறு - ஜலங்களில் விருப்பம், பல்லவம் முதலியவைகளில் வெறுப்பு, யானையினருகில் செல்லாதிருத்தல், அதற்குத் தின்பண்டங்களைக் கொடுத்தல், அதற்கு முன்னிலையில் நிற்பது, அதன் உதடு-ஆண்குறி மலதுவாரங்களை முகருதல், துதிக்கையைக் கட்டித்தழுவி ஸந்தோஷித்தல், வாலைத் தூக்கிக்கொண்டு தலையைக் குனிந்து முன்கால்களை மண்டியிட்டு காது முகத்தைத் தொங்கவிட்டு, துதிக்கையை பூமியிலூன்றி நிற்பது, ஆகிய அறிகுறிகளுள்ளதை ருதுமதீ என்று அறியவேண்டும்.

யானை, ருதுகாலத்தில் பிடியுடன் புணரும். புணர்ச்சியோடு, ருது நீங்கிவிடும். கர்ப்பமுற்ற பிடி, புணர்ச்சியை விரும்பாது. பன்னிரண்டாவது மாதத்தில் குட்டிபோடும்,

பெண் யானைகளில் தேநுகா — வர்தநீ — நாசோரிகா, என்று மூன்றுவகையுண்டு. அவைகள், முறையே ஒன்று, இரண்டு, மூன்று, வருடங்களில் கன்று போடும்.

கர்ப்பந்தரித்த பிடி, ஸந்தோஷத்தாலும், சிரமத்தாலும், யானையை மெள்ளப் பிடித்துக்கொண்டு நடக்கும். அடிக்கடி மரத்தில் உராய்ந்துகொள்ளும். சேற்று ஜலத்தில் முழுகும்.

நிழலிலேயே நிற்கும். ஆண்யானை பக்கத்தில் வருவதையும் நடப்பதையும் வெறுக்கும். இந்த அடையாளங்களால் பிடி, கர்பந்தரித்திருப்பதை அறிந்துகொள்ளல் வேண்டும்.

சூலுற்ற பிடி, முதல் மாதத்தில் ஆணை வெறுக்கும். கசப்பிலும் தித்திப்பிலும் பிரியமுள்ளதாம். இரண்டாவது மாதத்தில் கர்ப்பப்பை உண்டாகிறது. மந்தமாக இருக்கும். கொட்டாவி விடும். மூன்றாவது மாதம் யோநி கசிவுள்ளதாம். மிருதுவாயும் குளிர்ச்சியாயுமுள்ள இடத்தில் ஆசையும், சோம்பலுமுள்ளதாம். நான்காவது மாதத்தில் மெள்ள நடக்கும். மெள்ள உட்காரும். ஐந்தாவது மாதத்தில் வயிறு நிரம்பி இருக்கும். புழுதி - சேறு - ஜலங்களில் பிரியமுள்ளதாம். ஆறாவது மாதத்தில் யூதம் செல்லுமிடத்தில் மிருதுவான ஸமபூமியிலேயே இருக்கும். ஏழாவது மாதத்தில் அடிக்கடி கொட்டாவி விடும், மெதுவாகவே நடக்கும். எட்டாவது மாதத்தில் பற்களைக் கடிக்கும், ஆழமுள்ள ஜலத்தில் மூழ்க விரும்பும். ஒன்பதாவது மாதத்தில் வயிறு நிறைந்து பருத்து இருக்கும். ஸ்தநங்கள் பருத்துத் தெரியும். பத்தாவது மாதத்தில் முகமும் கண்களும் வாடியிருக்கும். மயிர்கள் உதிர்ந்துவிடும். பதினோராவது மாதத்தில் பள்ளமான இடத்தை வெறுக்கும். படுக்கவும் எழவும் துன்புறும். பன்னிரண்டாவது மாதத்தில் கர்ப்பச் சுமையால் தொப்புள் சுரந்திருக்கும். சோம்பலடையும். யோநி விரிந்திருக்கும்.

கர்ப்பமடையாததை அடைந்ததென்றும், கர்ப்பமடைந்ததை கர்ப்பமற்றதென்றும், பொய்யாக ஊகிப்பவன், யானைகளுக்கும் அரசனுக்கும் துன்பம் விளைவிப்பவனாவான்.

கர்ப்பவாயு, சுக்கிலத்தை இரு கூறுகளாகப் பிரிப்பதால், இரண்டு ஆண் குட்டிகளும், சோணிதத்தை இரு கூறுகளாகப் பிரிப்பதால், இரண்டு பெண் குட்டிகளும் பிறக்கின்றன.

கர்ப்பமானது வலது புறத்திலிருந்தால் ஆணென்றும், இடது புறத்திலிருந்தால் பெண்ணென்றும், நடுவிலிருந்தால் அலி என்றும் கூறுகின்றனர்.

தாது - கர்ப்பவாயு - சித்தம் - இவைகளின் தோஷத்தால், கூன், குருடு, குட்டை, நீளம், அங்கஹீநம், அதிகாங்கம், விகார உருவம், முதலிய தோஷங்களுள்ள குட்டிகள் பிறக்கின்றன.

கர்ப்பிணீ லக்ஷணம் முற்றும்.

## கந்தஹஸ்தி லக்ஷணம்.

—o—

வஸந்தகாலம், ஸகலப் பிராணிகளுக்கும் மனதிற்கு உத்ஸாஹத்தைத் தரத்தக்கது. ஏழு வருஷங்களுக்கு ஒரு முறை "ஸாகஞ்சரம்" என்ற காற்றானது ஜலத்தில் உண்டாகிறது. அக்காற்று, யாவருக்கும் ஸந்தோஷத்தையுண்டுபண்ணும். அப்பொழுது, யானைகளும் பிடிகளும் மதங்கொள்ளுகின்றன. மதங்கொண்ட யானையும், மதங்கொண்ட பிடியும் புணருவதால் பிறக்கும் குட்டியே, கந்தஹஸ்தியாகும். இது அரசனுக்கு ஜயத்தைக் கொடுக்கும்.

வயதடைந்து மதங்கொண்ட கந்தஹஸ்தியின் மதம், மூத்திரம், மலங்கள், தேன் மணமுள்ளதாம். இதன் வியர்வை, மதம், மூத்திரம், லத்திகளை முகரும் யானைகளுக்கும் மதம் பிடிக்கும்.

கந்தஹஸ்தி லக்ஷணம் முற்றும்.

# நவ கிருஹீத கஜோபசாரம்.

—— o ——

கூட்டுண்டு மனம் புழுங்கிய யானைகள், புற்களையும், ஓஷதிகளையும், பழங்களையும் தின்று, காடுகளில் ஸ்வேச்சையாகத் திரியும் யானைகளைப்போல், ஜீவித்திருப்பதில்லை.

ஆகையால், அவைகள் மரணமடையாமல் பிழைத்திருப்பதற்காக, அவைகளைத் தக்க வைத்தியர்களைக்கொண்டு, நல்ல முறையில் உபசரிக்க வேண்டும். அவைகளுக்குப் பழக்கமில்லாத ஆஹாரங்களால் தோஷங்கள் அதிகரிக்கின்றன.

நிறைய ஆஹாரம் செய்து, பிறகு அது கிடைக்காவிட்டால், வியாதிகள் உண்டாகின்றன. அபோஜநம், அதிபோஜநம், கெட்ட இடத்தில் படுக்கை, விருப்பமில்லாத பானம் - போஜனம், கட்டிப்போடுதல், துன்புறுத்தல், உப்பை அதிகமாகச் சேர்த்தல், உப்பே சேர்க்காமலிருத்தல், இவைகளால், வியாதிகளும் ஸந்நிபாத ரோகங்களும் உண்டாகின்றன. ஆகையால், புதிதாகப் பிடித்த யானைகளை நல்ல முறையில் உபசரிக்கவேண்டும்.

புதிதாகப் பிடித்த யானைக்குத் தொட்டியில் ஜலம் காட்டக் கூடாது. சுற்றிலும் யந்திரங்களால் தண்ணீர் தெளிக்க வேண்டும். காலையில் காது மட்டம் தண்ணீரில் இறக்க வேண்டும். குளிர்ச்சியால் சடிதியில் காட்டுஸ்வேச்சையை மறந்துவிடும். சோர்வும், சிரமமும் தீரும். ஒண்ணரை யாமம் பகல் பாக்கியிருக்கும்பொழுது, கரையிலேற்ற வேண்டும். அப்பொழுது, நூறுமுறை சுத்திசெய்த நெய்யை அதற்குத் தடவவேண்டும். இரண்டு நாட்களுக்குப் பின், உடம்பு முழுமையும் நெய் தடவிக் குளிப்பாட்ட வேண்டும். சரத் — கிரீஷ்மம் நீங்கிய காலங்களில், மூன்று காலங்களிலும் குளிப்பாட்டவேண்டும், குளிரால் வருந்தும் யானைக்கு, தைலம் மட்டிலும் தடவவேண்டும். கடங்கரம், மூங்கில்

தழை, இலைகள், புற்கள், கரும்பு, தாமரைத் தண்டு முதலியவைகள், மரம், வாழைக்கிழங்கு, தாமரைக்கிழங்கு, நீர்முள், மாவுள்ள கிழங்கு, இவைகளையும், மனதிற்கு உவந்தவைகளையும், ஆஹாரம் கொடுக்கவேண்டும். அதனால் அதன் தாபம் தீரும்.

நாட்டில் பசுமையான ஆஹாரங்களைத் தின்று பழகியதால், அவைகளுக்கு மற்ற ஆஹாரங்கள் ஒவ்வாதனவாம். ஆதலால் அவைகளுக்கு, புல்லும் - அரிசியும் கொடுக்கவேண்டும்.

முதலில் ஒருபலம் அரிசியும், பிறகு, ஒவ்வொரு பலம் கூடுதலாக அரைச்சேர் வரையிலும் கொடுக்கவேண்டும். பிறகு, வெல்லம் கலந்து கால்கால் படி கூடுதலாக ஒரு மரக்கால் வரையில் கொடுக்கவேண்டும்.

புல் முதலியவைகள் கடினமாக இருக்கும் பொழுது, அத்துடன் உப்பு — மூத்திரம் — வெல்லம் — இவைகளைச் சேர்த்துக் கலந்து கொடுக்கவேண்டும். அதனால், ஜாடராக்கினியும் தேஜஸ்ஸும் விருத்தியடையும். அரிசியுடன் உப்பும், மாவுடன் வெல்லமும், கலந்து கொடுக்கவேண்டும். ருது காலத்திற்குத் தக்கபடி அவைகளைக் குளிப்பாட்ட வேண்டும்.

நவ கிருஹீத கஜோபசாரம் முற்றும்.

# ஹஸ்திவர்தந பிரகாரம்.

—— o ——

வெற்றியை விரும்பும் அரசர்கள், யானைகளைப் போஷித்து வர வேண்டும்.

அவைகட்கு, நெய் அல்லது தயிர் கலந்த மாவு, மாமிச ரஸம், கரும்பு, கஞ்சி, கோதுமைக்கஞ்சி, தானியக்கதிர்கள், இவைகளைக் கொடுக்கவேண்டும்.

அவைகளைக் குளிப்பாட்டுதல், மிருதுவான மண்படுக்கை, புழுதியில் விளையாடவிடுதல், முதலியவைகளால் மகிழ்விக்க வேண்டும்.

கட்டுண்டு துன்புற்று வருந்தும் யானைகள், வன ஸுகத்தை நினைத்தும், பழக்கமற்ற ஆஹாரத்தாலும், அஜீரணம், அலுப்பு, தூக்கமின்மை, இவைகளாலும் வியாதியுறும்.

ஆகையால், அவைகளின் ரோகங்களை, வநௌஷதி களாலும், ஔஷதங்களாலும் போக்கவேண்டும்.

பத்துப் பலம் சூரணம், இருபது பலம் கல்கம், ஒரு ஆடகம் கஷாயம், இவைகளை எட்டுப்பங்கு ஜலம் சேர்த்து பாகம் செய்து, கஷாயம்போல் எடுத்து, யானை விழித்து மூத்திரம் பெய்தவுடன், தினந்தோறும் கொடுக்கவேண்டும். குடித்தவுடன் நன்கு கழுவிவிட வேண்டும். அதன் பிறகு, நூறுதடவை சுத்திசெய்த நெய்யை, ஸாயங்காலத்தில் உடம்பு முழுமையும் தடவவேண்டும். இரண்டு நாட்களுக்குப்பின், நெய் தடவவேண்டும், குளிர்காலத்தில், எண்ணையை மட்டிலும் தடவவேண்டும். பிறகு குளிப்பாட்டி, காலக் கிரமத்தில் நெய் தடவுவதைக் குறைத்துவர வேண்டும்.

கரும்பு. தாமரைத்தண்டு, இனிய மரங்கள், வாழைக் கிழங்கு, தாமரைக்கிழங்கு, திருணகந்தம், இலுப்பைவேர், கொன்னைவேர், விளாமிச்சைவேர், முதலியவைகளைக் கொடுக்க தாபம் தீரும்.

ஹஸ்திவர்தந பிரகாரம் முற்றும்.



# கஜ சிக்ஷண விதி.

—— o

யானையின் முன்பக்கம் மூன்று பேர்களும், காதண்டைகளில் இரண்டு பேர்களும், அதன் இரு பக்கங்களிலும் நன்றாகப் பழகிய இரண்டு பெண் யானைகளும், பின்பக்கத்தில் இரண்டு பேர்களும், (ஈட்டி, கண்டரக்கோடாரி, முதலிய ஆயுதங்களுடன்) நின்றுகொண்டும், அதன் மேலே பாகன் ஏறிக்கொண்டும், யானைக்கு பாஷையைக் கற்பித்து, அவைகளுக்கு வேலைகளைச் செய்ய கற்பித்துக் கொடுக்கவேண்டும். இவ்விதம், சோம்ப லில்லாமல் தினந்தோறும் கற்பித்துக் கொடுக்கவேண்டும்.

பாலகாப்பியர் முதலியவர்கள் கூறியுள்ள கஜசிக்ஷை பாஷை, பிராகிருதபாஷை, தேசபாஷை, இவைகளைக் கற்பிக்கலாம்.

இவ்விதம் பழக்கப்பட்ட யானைகள், காலாள் படைகளையும், குதிரைப் படைகளையும் வெற்றிகொள்ளும். ஆகையால் யானைகளைப் பழக்கிப் படையில் சேர்க்கவேண்டும்.

கஜ சிக்ஷண விதி முற்றும்.

# கஜாரோஹண லக்ஷணம்.

o

யானை மீது ஏறுகிறவன், உத்தமன், மத்திமன், அதமன், என மூன்றுவிதம். இவர்கள், பலயுதன், யுக்தியுதன், ரேகாயுதன், என்றும் கூறப்படுவார்கள்.

தனது ஸாமர்த்தியத்தால், யானையைத் தன் வசப்படுத்து கிறவன், பலயுதனாவான். தனது ஸாமர்த்தியத்திற்குப் பொருந்த, யானையை அநுஸரிப்பவன், யுக்தியுதனாவான்.

முற்றிலும் யானையின் போக்கை அநுஸரித்தே நடப்பவன், ரேகாயுதனுவான். இவை எல்லாம் பொருந்தியவன் மிகவும் சிறந்தவனுவான்.

யானை மீது ஏறுவது எட்டுவிதமும், இறங்குவது பத்துவிதமுமாம்.

முன்னே இரு பக்கங்கள், பின்னுல் இரு பக்கங்கள், இவைகளில் கயிற்றின் பிடிப்பு, என்று ஏறும்வகை எட்டு. யானைகளின் துதிக்கையின் வழியாக ஏறுவதும் இறங்குவதும் கூட உண்டு.

உத்கிருஷ்டம், மத்திமம், அபகிருஷ்டம், என ஆஸநம் (உட்காருதல்) மூன்றுவிதம், கழுத்து - கொண்டைகளின் இடையில் உட்காருவது, உத்கிருஷ்டாஸநமாம். கொண்டைக்கு மேலே உட்காருவது, மத்திமாஸநமாம். தோளுக்குக் கீழே உட்காருவது, அபருஷ்டாஸநமாம்.

யானையின் இரு பக்கங்களிலும் இரு கால்களையும் நன்குற நீட்டி, முழுப்பாதங்களாலும் நன்கு பற்றிக் கொள்ளுவது உத்கிருஷ்டமாகும். நடுத்தரமாகப் பற்றிக் கொள்ளுவது மத்திமமாம். இலேசாகப் பற்றிக்கொள்ளுவது அபகிருஷ்டாஸநமாம்.

மந்தஜாதி கஜத்திற்கும், சண்டைக்கும், உத்கிருஷ்டாஸநம் சிறந்தது. பத்திரஜாதி கஜத்திற்கும், ஸாதாரணமாகச் செல்லுவதற்கும், மத்திமாஸநம் சிறந்ததாம். மிருகஜாதி கஜத்திற்கும், தலையை ஆட்டிக்கொண்டு செல்லும் கஜங்களுக்கும், அபகிருஷ்டாஸநம் சிறந்ததாகும்.

எல்லாவித ஆஸநங்களிலும், கால்களை நீட்டிப் பொறுத்தி, முழங்கால்களால் பற்றி, அழகுபடுத்திக்கொள்ளல் வேண்டும்.

யானைகளுக்குக் காரியங்களை அறிவிப்பதற்கு "பிரணிதி" என்று பெயர். இது "பாதப் பிரணிதி" "வாக்பிரணிதி" "அங்குசப் பிரணிதி" என மூன்றுவிதமாம்.

யானையின் மீதேறியவன், யானையின் கண்டாபரணத்தில் கால்களை மாட்டிக்கொண்டு, பெருவிரல், குதிகால்களைப் பதியவைத்து, துடைகளால் பற்றிக்கொண்டு, கும்பஸந்தியில் இடதுகையை ஊன்றிக்கொண்டு, வலதுகையில் அங்குசத்தைப் பிடித்துக்கொண்டு, அசையாமல், நேர்ப்பார்வையுடன் உட்கார வேண்டும்.

இவை யாவையும் நன்கு அறிந்தவன், யானைகளை, ஆறுவித கஜகதிகளிலும், எக்காலத்திலும் ஓட்டிச் செல்லலாம்.

கஜ லக்ஷணம், பிரணிதி திருதயம், ஆரோஹணம், அவரோஹணம், ஆஸநத்திரயம், சிகித்ஸை, நிமித்தம், போக்கு வரத்து, இவைகளை அறிந்து, ரோகமற்ற சரீரமுடையவன், " மஹாமாத்திரன் " எனப்படுவான்.

சாஸ்திரத்தைக் கற்றறிந்து, நல்ல பயிர்ச்சிபெற்று, யானைகளின் இங்கிதங்கள் சேஷ்டைகளை அறிந்தவன், யானைமீது ஏறிச்செல்லத் தகுதியுடையவனாவான்.

கஜாரோஹண லக்ஷணம் முற்றும்.

## ஆஸந லக்ஷணம்.

—— o ——

யானைகளின் முன்பக்கத்தில் மூன்று ஆஸநங்களும், பின் பக்கத்தில் ஐந்து ஆஸநங்களும் கூறப்பட்டிருக்கின்றன. முன்பக்கம் கூறப்பட்ட மூன்று ஆஸநங்களுக்கு, உத்கிருஷ்டம், மத்திமம், அபகிருஷ்டம், எனப்பெயர்.

முன்பக்கம் உயர்ந்த யானையில் உத்கிருஷ்டாஸநமும், ஸமமான யானையில் ஸமாஸநமும், முன்பக்கம் தணிந்த யானையில், அபகிருஷ்டாஸநமும், கூறப்பட்டிருக்கிறது.

பத்திரஜாதி கஜத்திலும், முஷ்டியுக்தத்திலும், சலாஸநங்களிலும், உத்கிருஷ்டாஸநம் கூறப்பட்டிருக்கிறது. மிருக ஜாதி கஜத்திலும், சாய்ந்த தோளுடைய யானையிலும், தலையை அசைத்துக்கொண்டிருக்கும் யானையிலும், தோளில் காயமுள்ள யானையிலும், அபகிருஷ்டாஸநம் கூறப்பட்டிருக்கிறது. மந்தஜாதியிலும், சிறுத்து நீண்ட கழுத்துடைய யானையிலும், மத்திமாஸநம் கூறப்பட்டிருக்கிறது. ஸங்கீர்ண ஜாதி கஜங்களில் ஸமயோசிதமாக எல்லாவித ஆஸநங்களும் கூறப்பட்டுள்ளன.

ஆஸந லக்ஷணம் முற்றும்.



## மதாதி யுத்பாதந ஔஷதம்.

முன்னொரு காலத்தில், தேவர்களும் முனிவர்களும் உலகை வெற்றிகொள்ள முயன்றனர். அவர்களின் தேஜோ பாகங்களால், பிரமதேவர், மதபுருஷனைப் படைத்தார். அவனது வளர்ச்சியைக்கண்டு தேவர்கள் பயமடைந்தனர். உடனே பிரமதேவர், வாமதேவியம் என்னும் ஸாமாவினுல் அவனை ஸமாதானம் செய்து, இரு கூறுகளாகப் பிரிந்து, ஜங்கமங்களில் ஒரு பகுதியாலும், கஜங்களில் மற்றொரு பகுதியினுலும் இருக்கச் செய்தார்.

மதமானது ருதுகாலங்களில் சராசரங்களில் தோன்றும். யானைகளினிடத்தில் மதமானது அதிகமாகப் பெருகும். அம்மதம், லக்ஷ்மி — ஸௌபாக்கியம் — ஜயங்களைத் தரும். மங்களகரமானதாகும்.

மதம் பிடித்த யானைக்குப் பசி தாகம் தெரியாது. முப்பது வயதிற்குட்பட்ட யானைகளுக்கு, அகாலத்திலும் மதம் பிடிக்கும், என்று மதபுருஷனுக்குப் பிரமன் வரமளித்தார்,

மதம் யானை இரண்டிற்கும், ஒன்றே உபாதான காரணமாம். ஆதலால் மதத்தை யானையைத்தவிர மற்றவைகள் தாங்கமுடியாது. மதமற்ற யானை ஓடாது. சண்டை செய்யாது. மதமே யானைக்கு சிறந்த குணமாகும்.

மதங்கொண்ட யானையின் உடல் — முகம் — கன்னம்— துதிக்கை முதலியவைகள் பருக்கும். கஜங்களின் ஜாதிக்குத் தக்கபடி, மதகரமான ஆஹாரங்களையும் ஔஷதங்களையும் கொடுக்கவேண்டும்.

சித்தாமுட்டி, கோரைக்கிழங்கு, பூசர்க்கரைக்கிழங்கு, நெரிஞ்சில், முள்ளிலவை வேர், சதாவரிக்கிழங்கு, அமுக்கராக் கிழங்கு, கோக்ஷீரீ, பிராய், வெண்சர்க்கரை, ஜடாமாஞ்சி, வெட்பாலை, நெல்லி, சிந்தில், உளுந்து, இவைகளைச் சூரணம் செய்து, பாலுடன் பிசைந்து கொடுக்க, உடல் பருக்கும்.

சித்தாமுட்டி, நெரிஞ்சில், பூசணி, உளுந்து, நெல்லி, சதாவரிக்கிழங்கு, கோரைக்கிழங்கு, வெட்பாலை, இவைகளைப் பொடிசெய்து பாலுடன் பிசைந்து கொடுக்க உடல் பருக்கும்.

சிற்றீச்சை, ஏரழிஞ்சில், ஜடாமாஞ்சி, வெண்கண்டங் கத்தரி, வெண்ணொச்சில், கொடி வேலி, துளஸி, முருங்கை, திராக்ஷை, மலையறுகு, பூசர்க்கரைக் கிழங்கு, முன்னை, மத்ஸ்யம், தண்ணீர்விட்டான் கிழங்கு, புன்னை, கொன்னை, வியஸ்தாரா? எள்ளு, தாமரைமலர், சேங்கொட்டைவேர், மருள், நிலக்குமிழ் முதுக்கன், செங்குறிஞ்சில், இவைகளை ஸமபாகமாகப் பொடித்து, யானை எழுந்தவுடன், நெய் — பால் — தயிர் கூட்டிக் கவளமாகக் கொடுக்க, முகம் பருக்கும்.

கடுகுரோஹிணீ, இலந்தை, குன்றி, வெள்ளைக்காக்கணம், நெருஞ்சில், பேராமுட்டி, சதாவரிக்கிழங்கு, நிலப்பனைக் கிழங்கு, நரிவிலி, சித்தாமுட்டி, நிலக்குமிழ், பூசர்க்கரைக் கிழங்கு, முள்ளிலவை, இவைகளை, ஸமபாகம் பொடித்து, தயிர் கலந்து, கவளமாகக் கொடுக்க, யானையின் கபோலங்கள் பருக்கும்.

ஏலம், புங்கை, வெட்பாலை, அரிதாரம், மனோசிலை, திரிபலா, கோஷ்டம், மல்லி, காயம், ஸர்பசஞ்சுகம், தேவதாளிப்பீர்க்கு, ஜடாமாஞ்சி, கோரைக்கிழங்கு, கொடிவேலி, இந்துப்பு, சதாவரி, உள்ளி, ஊமத்தை, பொன்முசுட்டை, இவைகளைத் தூள் செய்து, வஸ்தியும் — கடலேபனமும் செய்ய, கபோலம் தோஷமற்றதாகும்.

மாடப்புறா மலமும், காயமும், சேர்த்துச் செய்த வர்த்தியால் வாதம் சாந்தியடையும், யவமத்யப் பிரமாணமுள்ள வர்த்தியை ஒரு முஹூர்த்தம் வைத்திருக்கவேண்டும்.

கொடிவேலி, அறுகு, இலந்தைவேர், அல்லது பாவேர், இவைகளைப் பொடித்து, தேனும், தைலமும் கூட்டி (முன்போல் செய்யவும்.)

வெல்லம், நல்லெண்ணெய், குங்கிலியம், சுக்கு, கடுகுரோஹிணி, இலுப்பை, ஆகிய ஔஷதங்கள் கொடுக்க, மதம் அதிகமாகும்.

தாமரை, ஆடாதொடை, துளசி, சீந்தில், புங்கை, இவ்வைந்தையும், ஸமபாகம் பொடித்து, தயிர், கரும்பு, பால், நெய் சேர்த்து, கவளமாகக் கொடுக்க, மதம் பெருகும்.

தாழம்பூ, முருங்கைப்பூ, துளசி, சித்தாமுட்டிவேர், வெட்டிவேர், விளாமிச்சைவேர், வெண்ணொச்சிவேர், புங்கம்வேர், வாழைக்கிழங்கு, கபந்தா, கோரைக்கிழங்கு, சிறுநாகப்பூ, இவைகளை ஸமபாகம் பொடித்து, தேன் — தைலம் கூட்டிக்கொடுக்க, மதம், நறுமணமுள்ளதாகும்.

திப்பிலி, மிளகு, சுக்கு, பூனைக்காலிவிதை, இவைகளையரைத்து, தைலத்தில் குழப்பி, கன்னத்தில் பூசக் கோபமுண்டாகும்.

கடுகு, முருங்கைவேர், மாசிப்பச்சை, யானைத்திப்பிலி, இஞ்சி, இவைகளுடன், மாதுளையும் கூட்டிக் கவளம் கொடுக்க கோபம் அதிகமாகும்.

கோபதீபந ஔஷதங்களை, (சண்டைக்கு) முதல் நாளே கொடுக்கவேண்டும்.

மதாதி யுத்பாதந ஔஷதம் முற்றும்.

# ஸமத கஜாரோஹண காலம்.

யானைகளின் மதாவஸ்தை ஒன்பது. முதல் மூன்று அவஸ்தைகளில் திமிர்கொண்டு வேலை செய்யாது. கடைசி மூன்று அவஸ்தைகளில் அறிவிழந்துவிடுவதால் வேலை செய்யாது. மத்திமமான மூன்று அவஸ்தைகளிலும் லாகவமும் வேகமுமுள்ளதாம். பாகனுக்கு அடங்கி நடக்கும். எக்காரியங்களையும் செய்யும். எனவே, மத்திமமான மூன்று அவஸ்தைகளிலும், யானைமீதேறி, உல்லாஸ யாத்திரையும், சண்டையும் செய்யலாம்.

ஸமத கஜா ரோஹண காலம் முற்றும்.

# மத சிகித்ஸா விதி.

எல்லா மதாவஸ்தைகளிலும் சிகித்ஸை செய்ய வேண்டும் ஜலத்தில் முளைத்த ஆஹாரங்கள், பசுமையான இளம் புற்கள், சம்பாப்பயிர், ஊந்தண்ணுடன் மாமிசம், இவைகள், நலனைக் கொடுக்கும்.

கரும்பு, புல், வாழை, தாழை, தனிமையில் படுக்கை, சேறு - புழுதிகளில் உள்ள விருப்பத்தை தடுக்காமலிருப்பது, தனித்த இடத்தில் வைப்பது, பழக்கமில்லாத குளிர்ச்சியான இடத்தில் வைப்பது, குட்டி முதலியவைகளைக் காணமல் வைப்பது, திராக்ஷை, பாதிரி, பேரீச்சைகளைச் சேர்த்து கபளம் கொடுப்பது, தாமரை, நீலம், மோதகம், சர்க்கரை கலந்த நெய், உத்காரிகை, வேசவாரம், நெய்கலந்த பயறு, தைலத்துடன் சோறு, இவைகளைக் கொடுப்பது, கோசலேபனம், இவைகளால் தாதுஸாமியத்தை உண்டுபண்ண வேண்டும்,

குளிர்ச்சியான மடுவில் குளிப்பாட்டுவது, அங்குசாதிகளால் கட்டுப்படுத்துவது, அதிகமாக லாலனை செய்வது, நிலவில் மிருதுவான படுக்கையில் கட்டுவது, அதிகமாக நிர்பந்தம் செய்யாமலிருப்பது, கொல்ல நினைப்பதைத் தடுப்பது, தோஷமில்லாமலிருந்தால் அங்கஸேவநம் செய்வது, இவைகளால், வெறுப்படைந்த யானை பிரியமுள்ளதாக ஆகும். பிறகு, தீபந ஔஷதங்களைக் கொடுத்தால், அக்கினி தீபனமடையும். மேதாவிகளான வைத்தியர்களைக்கொண்டு, யானைகளை புஷ்டி அடையும்படி செய்யவேண்டும்.

தேஜஸ், பலம், வேகம், தாதுபுஷ்டி, ஸந்திகளில் உறுதி, நல்ல நிறம், இவைகளையுடைய யானை, மதம் நீங்கியதாகும்.

மத சிகித்ஸை முற்றும்.



# கஜ க்ஷேத்திர லக்ஷணம்.

யானைகளின் அங்கங்கள், பன்னிரண்டு க்ஷேத்திரங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அவைகள், முறையே, துதிக்கை - முகம் - தந்தம் - மத்தகம் - கண் - காது - கழுத்து முன்னுடல் - மார்பு - பின்னுடல் - ஆண்குறி - பிருஷ்டபாகம் - இவைகளாம். எட்டாவது க்ஷேத்திரம் வரையில், "பூர்வகாயம்" என்றும், ஒன்பதும் பத்தும், "மத்திம காயம்" என்றும், வகுக்கப்பட்டுள்ளது.

பத்து வருஷங்களுக்கு, ஒரு தசை என்று பெயர். ஒவ்வொரு க்ஷேத்திரமும் பத்து வருஷம் பலனைக் கொடுக்கும். எந்த க்ஷேத்திரத்தில் சுபலக்ஷணங்கள் காணப்படுகிறதோ, அதற்குரிய தசையில், அந்த லக்ஷணபலனைக் கொடுக்கும்.

மனிதர்களின் லக்ஷணங்கள், அவர்களுக்கே பலனைக் கொடுக்கும். யானைகளின் லக்ஷணங்கள், எஜமானனுக்கு பலனைக் கொடுக்கும்.

கஜ க்ஷேத்திர லக்ஷணம் முற்றும்.



# கஜ மூலிய நிர்ணயம்.

—— o ——

ஏ அரசனே! ஸர்வதேவதா ஸ்வரூபமான கஜத்திற்கு, இவ்வளவுதான் விலை என்று கூறுவதற்கில்லை. வாங்குகிறவன் விற்பவன் இருவருக்கும் ஸம்மதமான விலை உத்தமமாகும். ஒருவருக்கு மட்டிலும் ஸம்மதமான விலை மத்திமமாகும். இருவருக்கும் அஸம்மதமான விலை அதமமாகும்.

ஸகல லக்ஷணங்களும் பொருந்திய கஜம் கிடைத்தால், அதை அரசன் தனது பூமி முழுமையும் கொடுத்தாவது வாங்கிவிட வேண்டும்.

மந்தம் — பந்திரமந்தம் — மந்தபத்திரம் — மிருகாபரகாத்திரம் — ஆகிய யானைகள், மஹாதோஷமில்லாமல், துதிக்கை - தந்தம் - கண் - கும்பம் - பாதம் - நகம் - இவைகளில் சுப லக்ஷணமும் நல்ல நிறமும் உள்ளதாக இருந்தால், அதை, முழுவிலை கொடுத்து வாங்கிவிட வேண்டும்.

சூலுற்றதையும் குட்டியுடன் கூடியதையும் வாங்கலாகாது.

ஒரு தந்தம் முறிந்ததையும் ஒரு அங்கம் ஒடிந்ததையும் அரை விலைக்கு வாங்கி, ஸாதாரணமான ஜனங்களை அனுப்புவதற்கு உபயோகிக்கலாம்.

ஒரு கண் இல்லாததையும் துதிக்கை - நுனிக்காது - வால் நுனி — இவைகள் வெட்டுண்டதை, அரைவிலைக்கு வாங்கியும் பாரம் சுமக்க உபயோகிக்கலாம்.

இரண்டு தந்தங்களும் முறிந்தது, உடற்கூறு இரண்டும் முறிந்தது, பின்பக்கம் இரண்டும் முறிந்தது, இவைகளை, கால்விலைக்கு வாங்கலாம்.

அங்கஹீநம், அதிகாங்கம், அராளம், அதியராளம், முதலிய மஹாதோஷமுள்ள யானைகளை அரை விலைக்கு வாங்கி, உடனே சத்துரு தேசத்திற்கு அனுப்பிவிட வேண்டும். அவைகள், ஒரு நாள் கூட கஜசாலையில் தங்கலாகாது.

சாயாஹீநம், குப்ஜம், பைசாசம், ரோம கூர்ச்சம், கசாவிருதம், இவைகளை அரை விலைக்கு வாங்கி, பகை நாடு அழிவதற்காக, அதை உடனே, பகைவன் நாட்டுக்கு அனுப்பிவிட வேண்டும்.

ஸகல லக்ஷணங்களும் பொருந்தியிருந்தாலும், காலற்ற யானை, "அர்த நாகம்" எனப்படும். அதை ஒதுக்கிவிட வேண்டும்.

கஜ மூலிய நிர்ணயம் முற்றும்.



# தந்தச்சேத பேஷஜம்.

———o———

**தே**ன் மெழுகு — அரக்கு — உளுத்தமாவு — தெள்ளிய மணல் — குங்கிலியம் — இவைகளை ஸமபாகம் கூட்டி, வெல்லம் சேர்த்துக் காய்ச்சி, தந்தத்திற்குச் சுற்றிலும் பூசி, அதில் பூணைச் சொருகவேண்டும்.

அதிமதுரம், மஞ்சள் குங்கிலியம் — தேன்மெழுகு — இவைகளை நெய் சேர்த்துக் காய்ச்சி, ஒறுக்கும் சூட்டில் தந்தங்களைச் சுற்றிலும் கனமாகப் பூசி, மிருதுவாயும் - உறுதியாயுமுள்ள தோலால் முகத்தை மூடிவைக்க வேண்டும்.

பூஜார்ஹமான யானைகளுக்கு, வைரம் — வைடூரியம் — முதலிய ரத்நங்களால் அழகிய ஆபரணங்களைப் போட வேண்டும்.

தந்தம் நறுக்கும் பொழுது, ரக்தம் வந்தாலும், போறை காணப்பட்டாலும், பிறகு, தந்தங்களை நறுக்கலாகாது.

தந்தச்சேத பேஷஜம் முற்றும்.



# கஜ வியாதி சிகித்சை.

— o —

முதலில், கஜங்களின் வியாதியானது ஜங்கமங்களாலுண்டானதா, ஸ்தாவரங்களாலுண்டானதா என்று தெரிந்து கொள்ளல் வேண்டும்.

ஸகல ஜீவராசிகளுக்கும் பிறவியிலேயே ஜ்வரம் உண்டாகிறது. அந்த ஜ்வரமானது, பிராணிகளின் பேதங்களால் பல பெயர்களால் கூறப்படுகிறது. அது வருமாறும்.

| | | |
|---|---|---|
| 1. | மனிதன். | ஜ்வரம். |
| 2. | யானை. | பாகலம். |
| 3. | குதிரை. | அபிதாபம். |
| 4. | கழுதை. | க்ஷோரகம். |
| 5. | உட்டகை. | அலஸகம். |
| 6. | பசு. | ஜுவாம். |
| 7. | பாம்பு. | அபிகம். |
| 8. | எருமை. | ஹாரித்ரம். |
| 9. | ஆடு. | பிரலேபம். |
| 10. | மிருகம். | மிருகரோகம். |
| 11. | பறவை. | பக்ஷபாதம். |
| 12. | மத்ஸ்யம். | இந்திரமதம். |
| 13. | புதர்கள். | கிரந்திகம். |
| 14. | மரம். | ஜியோதிஸ். |
| 15. | புஷ்பம். | பர்வதம். |
| 16. | தாமரை. | ரூபகம். |
| 17. | தானியம். | சூர்ணகம். |
| 18. | விரகு தானியம். | லலம். |
| 19. | காய் - கறிகள். | கேஸு. |
| 20. | பூமி. | ஊஷரம். |
| 21. | ஜலம். | நீலிகா. |

மனிதர்களைத் தவிர மற்றவைகள் ஜ்வரத்தைத் தாங்க முடியாது. எனவே, யானைகளுக்கு பாகலம் வந்தால், மருந்துகளால் குணப்படுத்தமுடியாது. ஆகையால்தான் அதற்கு சிகித்ஸை கூறப்படவில்லை.

நொச்சி — துளஸி — தேவதாரு — கோரைக்கிழங்கு — கோஷ்டம் - பூண்டு - மது - கருங்காலி - வாயுவிடங்கம் - சிறு தேக்கு - வெண்கடுகு - செங்கடுகு - முள்ளங்கி - பஞ்சகோலம் - புங்கை — பெருபுங்கை — மஹாபஞ்சமூலம் — இவைகளைக் கொடுக்க, " கபவாதம் " தீரும்.

சீந்தில் - ஓரிலை - மூவிலை - வெள்வேல் - கருவேல் - ஜீரகம் - எலியால் - பூண்டு - கருஞ்சீரகம், அல்லது சதகுப்பை - நிலக்குமிழ் - தண்ணீர்விட்டான் கிழங்கு - இவைகளை, சூரணமாகவோ, கல்கமாகவோ, அல்லது கஷாயமாகவோ, கொடுத்தால், "வாதபித்த தோஷங்களும், ஆமதோஷங்களும்" தீரும்.

பேப்புடல் — பொன்முசுட்டை — கோஷ்டம் — வேம்பு - நெல்லி - சீந்தில் - கருஞ்சிவதை - மல்லி - பர்பாடகம் . மறுள் - வெட்பாலை — இவைகளைக் கொடுக்க, " கபமும் — பித்தமும் " தீரும்.

காயம் — யவச்சாரம் — சுக்கு — வெல்லம் — இவைகள், " சூலவியாதியை "ப் போக்கும். திரியூஷணத்தாலாவது — சுக்கினாலாவது, அஞ்சனமிட வேண்டும்.

அமுக்கராக்கிழங்கு - திப்பிலி - மஞ்சள் - ரஸ பஞ்சகம் - இவைகள், " புழுக்களை "க் கொல்லும்.

வேம்பும், நிலவேம்பும், வகைக்குப் பலம் 8. பஞ்சலவணம் படி ஒன்று, இவைகள், வாயு - மூத்திரக்கடுப்பு - வயிற்றுப் பொறுமல் - சூலம் " இவைகளைப் போக்கும்.

வெட்பாலை — இஞ்சி — யவச்சாரம் – கொடிவேலி - இருபுங்கை — கடுகு — வாயு விளங்கம் - அதிவிடயம் – கோரைக்

கிழங்கு - திப்பிலி மூலம் - திப்பிலி - மஞ்சள் - முறுங்கை - கோஷ்டம் - இந்துப்பு - காயம் - இவைகளைத் தூள் செய்து, கோமூத்திரத்தில் கலக்கிக்கொடுக்க, அக்னி தீபனமாம் "ஆமவாதம்" தீரும்.

இந்துப்பு - ஜீரகம் - நீர்வாளம் - இஞ்சி - திருபலம் - இருபுங்கை - கடுரோஹிணீ - பேய்ப்புடல் - வேப்பங்கொழுந்து- வாலுழுவை - சீந்தில் - வசம்பு - இவைகளைத் தூள் செய்து, கபளமாகக் கொடுக்க, "மண்ணை"த் தின்றது "தீபன"மாம்.

வெண்சிவதை - எருக்கு - திருகுகள்ளி - நீர்வாளம் - அவிரி- பஞ்சலவணம் - வல்லாரை - மூக்கரட்டை - இவைகள், "நடுக்கல் ஒப்புஸத்தை"ப் போக்கும்.

பொன்முசுட்டை - பேப்புடல் - கோஷ்டம். வேம்பு - நில வேம்பு — பர்பாடகம் — வாலுழுவை — திருகுகள்ளி — ஆடாதொடை - சவ்வியம் - கண்டத்திப்பிலி - முருங்கை -வசம்பு - ஸோமவல்லி - லோத்திரம் - கொடிவேலி - முள்ளுக்கத்தரி - கடுகுரோஹிணீ - காஞ்சூரி - மஞ்சள் - (திரிவிருத் ?) திருபலம் - திருகடுகம் - வசம்பு - தாமரைக்கிழங்கு - யானைத்திப்பிலி - காட்டாத்தி — இவைகளைத் தூள் செய்து, தேனுடன் உபயோகிக்க, "கண்டரோகம்" நீங்கும்.

இந்துப்பு - சுக்கு - கோஷ்டம் - வசம்பு - முறுங்கை - இரு மஞ்சள் - கடுகு - யவச்சாரம் - இவைகளைத் தூள் செய்து, தயிரில் குழப்பிக் கொதிக்கவைத்து, ஒருக்கும் சூட்டில் உபயோகிக்க, "கபவாத வீக்கம்" தீரும். வீக்கத்தில் வியர்த்துவிடும்.

வீக்கம் பழுத்து, சஸ்திரசிகித்ஸை செய்யப்பட்டால், வேம்பு - நிலவேம்பு - இந்துப்பு - இவைகளைக் கலந்து போட, காயத்தில் துர்நாற்றம் நீங்கும். ரக்தம் சுண்டிப்போம். பக்குவமானதிலும், நறுக்கப்பட்டவுடனும், தேன் மெழுகுத் தூளை, மூன்று நாள் உபயோகிக்கவேண்டும்.

எள்ளு - வேப்பிலை - மஞ்சள் - இவைகளை அரைத்துத் தேனுடன் கலந்து போடுவது நல்லது. காயம் ஆறி, சதை சீக்கிரம் வளரும்.

தேத்தாங்கொட்டை - லோத்திரம் - இலுப்பை - சந்தனம் - கோரைக்கிழங்கு - வரள்த் தாமரை - மஞ்சிட்டை - விளாமிச்சை வேர் - வெட்டிவேர் - இவைகளாலான வர்த்தி - சூரணம் - சொட்டு - இவைகள், நேத்திர ரோகத்திற்கு நல்லது.

பாலுள்ள மரங்களின் கஷாயத்தில், திருவிதம் - திருபலம் - அஞ்சனக்கல் - அரக்கு - லோத்திரம் - சிந்தூரம் - குங்குலியம் - சேங்கொட்டை - மஞ்சள் - இலந்தை - பேயத்தி - பாலை இந்துப்பு - நீரடிமுத்து - ஸௌராஷ்டிராஞ்சனம் - ஸர்ஜசாரம் - பிரவேஷ்டகம்? இவைகளைத் தூள் செய்து போட்டு, சிறு தீயிட்டு, ஆப்பையால் கிளறி, இறுகிய பின் எடுத்து, அசையாமல் பூச, கழுத்துக்காயம் ஆறும்.

கஜ வியாதி சிகித்சை முற்றும்.



# பாலபோஷண விதி

—— o ——

அரசர்கள், விளையாடுவதற்காக, யானைக்குட்டிகளைப் பிடிப்பதுண்டு. அவைகளை வியாதிவராமல் காப்பாற்றவேண்டும். சாந்திஹோமங்களும் பௌஷ்டககர்மாக்களும் செய்து, அவைகளுக்கு ரக்ஷை செய்யவேண்டும்.

நெய் - தேன் - பால் - தேன்பாகு - இவைகளைக் கலந்து, அவைகளுக்குக் குடிக்கக் கொடுக்கவேண்டும். விதைநீர் - பசும்புல் - தாமரைத்தண்டு - நீலம் - கரும்பு - நீர்வல்லி - திருணகந்தம் - தாமரைக்கிழங்கு - இவைகளை திராக்ஷை கலந்து கொடுக்கவேண்டும்.

திராக்ஷை - சர்க்கரை - வெண்ணைகளுடன், திப்பிலிப் பொடி சேர்த்துக் கொடுக்கவேண்டும்.

பாலில் உத்காரிகை செய்து. (உத்காரிகை = சாரப்பருப்பு-தாமரைக் கிழங்கு - அதிமதுரம் - பலா - இவைகளால் செய்யப் பட்டது.) அத்துடன் நெய் - சர்க்கரை - மிளகு - திப்பிலிப்பொடி, இவைகளைக் கலந்து கொடுக்கவேண்டும்.

யானைக்குட்டிக்கு, உப்பு - கள்ளு - இலை முதலியவைகளைக் கொடுக்கக்கூடாது. நான்கு நாட்களுக்கு ஒருமுறை நெய் தேய்த்துக் குளிப்பாட்ட வேண்டும். மூன்று நாட்களுக்கு ஒரு முறை தாய் யானையிடம் அனுப்பவேண்டும்.

வஸந்த காலத்தில், ஆனைவணங்கி - தாமரை - தாழை களையும், கிரீஷ்ம காலத்தில், வாழை - மா - கரும்பு - யவை - பர்பாடகங்களையும், வருஷாகாலத்தில், இத்தி - பேரீச்சை - மூங்கில் - புங்கைகளையும், சரத்காலத்தில், கரும்பு - குசம் - அரசந்தழை - அருகு - நாணல் - தாமரைக் குருத்துக்களையும் ஹேமந்தகாலத்தில், வேம்பு - மா - நாவை - - சங்குர் செடிகளை யும், கொடுக்கவேண்டும்.

சரத் - கிரீஷ்ம - வஸந்த காலங்களில், நெய்யுடன் பாலும் கொடுப்பது நல்லது.

வர்ஷாகாலத்தில், பால் - கஞ்சி - நெய் கலந்த சோறு, இவைகளைக் கொடுப்பது நல்லது.

பனி காலத்தில், தைலம் - தயிராடை - இந்துப்பு - இவைகளைக் கலந்து கொடுக்க ஆமதோஷம் நீங்கும்.

சிறிய குட்டிக்கு 2 படியும், கொஞ்சம் பெரிய குட்டிக்கு, 4 படியும், கலபத்திற்கு 8 படியும், உசிதம்போல் கொடுக்க வேண்டும்.

யானைக் குட்டிகளை, தனது குழந்தைகளைப்போல் காப்பாற்றவேண்டும். அதனால் வெற்றியும், புத்திர - பௌத்திராபிவிருத்தியும் உண்டாகும்.

பாலபோஷண விதி முற்றும்.

# பத்திராதி கஜோத்பத்தி காலம்.

— o —

பத்திரஜாதி கஜங்கள் கிருதயுகத்திலும், மந்த ஜாதி கஜங்கள் திரேதாயுகத்திலும், மிருக ஜாதி கஜங்கள் துவாபர யுகத்திலும், மிச்சிர ஜாதி கஜங்கள் கலியுகத்திலும் உண்டாகின்றன.

வஸந்த - வருஷா காலங்களில் பத்திரஜாதியும், ஹேமந்த-சிசிர காலங்களில் மந்த ஜாதியும், சரத் - கிரீஷ்ம காலங்களில் மிருகஜாதியும் ஜனிக்கின்றன.

சரத் - ஹேமந்த மத்தியில் மந்தமிருகமும், வஸந்த - சிசிர மத்தியில் மந்தபத்திரமும், மது - ஹேமந்த (கிரீஷ்ம) மத்தியில் பத்திர மந்தமும், கிரீஷ்ம - வர்ஷா மத்தியில் பத்திர மிருகமும், சரத் - வருஷா மத்தியில் மிருக பத்திரமும், (ஹேமந்த - சிசிர மத்தியில் மிருக மந்தமும்,) உண்டாகின்றன.

ருது ஸந்திகளில் ஜனிக்கும் யானைகள் பயனற்றவைகளாம். நிச்சயம்.

முன் பகலில் ஜனிக்கும் யானைகள், சிலேஷ்ம சரீரமுடையவைகளாக இருக்கும். நடுப்பகலில் ஜனிப்பவைகள், பித்த சரீரமுள்ளவைகளாகவும், பிற்பகலில் ஜனிப்பவைகள் வாதசரீரமுள்ளவைகளாகவும் இருக்கும்.

ஸாமவேதம் - ஸமுத்திரம் - தேவர்கள் - தேவாதி கன்னிகைகள் - மது - ஸ்வபாவமான கர்பம் என்னும் ஆறு வகைகளில், யானைகளின் பிறவிகள் கூறப்படுகின்றன.

பத்திராதி கஜோத்பத்தி காலம் முற்றும்.



# கஜ வைத்தியம் ஸம்ஞையும் பரிபாஷையும்.

— o —

**தி**த்திப்பு - புளிப்பு - உப்பு - உரப்பு - கசப்பு - துவர்ப்பு - என்று சுவைகள் ஆறுவிதமாகும். இவைகள், பண்டங்களிலுள்ளவைகள். முறையே அதிக சக்தியுள்ளவைகள்.

தித்திப்பு - புளிப்பு - உப்பு - இம் மூன்றும், கபத்தையுண்டுபண்ணும். வாதத்தைக் கண்டிக்கும். உரப்பு - கசப்பு - துவர்ப்பு - இம்மூன்றுகளால், வாதமும் பித்தமும் அதிகரிக்கும். கபம் குறையும்.

தித்திப்பும் - துவர்ப்பும், குளுமையானவைகள். கசப்பு - உரப்பு - உப்பு - புளிப்பு - இந்நான்கும் உஷ்ணமானவைகள். பித்தத்தைத் தூக்கிவிடும்.

கசப்பு - உப்பு - துவர்ப்பு - இம்மூன்றும், வரட்சியுள்ளவைகள். வாதத்தைத் தூக்கிவிடும்.

புளிப்பு உஷ்ணமானது. உப்பு பசையுள்ளது. இவ்விரண்டும் வாதஹரமாம்.

தித்திப்பு - உப்பு - புளிப்பு - இவைகள் பசையுள்ளவைகள். கபத்தை விருத்தி செய்யும்.

கசப்பும் உரப்பும் வரட்சியுள்ளது. கபத்தைப் போக்கும்.

தித்திப்பு - புளிப்பு - துவர்ப்பு - உப்பு - இந்நான்கும், முதலில் (யானையின் நீளத்தில்) முழத்திற்கு ஒரு பலம் வீதம் கொடுக்க வேண்டும்.

உரப்பு - கசப்பு - துவர்ப்பு - இவைகளை, இருமடங்கு கொடுக்கவேண்டும்.

யானை, நல்ல நிலையை அடையும் வரையில் இம்முறையை அநுஸரிக்கவேண்டும்.

நல்ல ஸ்திதியும், தெளிந்த முகமும் உள்ள யானைக்கு, அறுபது பலம் தித்திப்பு, கபளமாகக் கொடுக்கவேண்டும்.

கசப்பு - ஐந்து பலம் குறைவாகவும், உரப்பு - பத்துப் பலம் குறைவாகவும், துவர்ப்பும் - உப்பும் - அறுபது பலமும் கொடுக்கவேண்டும்.

இந்த அளவு, ஏழுமுழ நீளமுள்ள யானைக்குக் கூறப் பட்டது. யானையின் அளவுக்குத் தக்கபடி, இவைகளை கூட்டியும் குறைத்தும் கொடுக்கவேண்டும்.

இருபது பலம் கொண்டது ஒரு கபளமாகும். இந்த அளவே ஔஷதங்களுக்குக் கூறப்பட்டது.

ஔஷதம் சிறிதளவு குறைந்தாலும், வியாதியைப் போக்காது. அதிகமானுல் வியாதியை அதிகரிக்கச் செய்யும். ஆகையால், வைத்தியன், முதலில், அக்கினி பலம் - காலம் - சரீரஸ்திதி - ஸ்வபாவம் - வயது - சரீரத்திற்கு ஒற்றுமை யானது - ஸத்துவம், இவைகளை நன்கு அறிந்துகொண்டு, பிறகு மருந்தைக் கொடுக்கவேண்டும்.

ஒற்றுமையுள்ள இரண்டு மருந்துகளைச் சேர்த்துக் கொடுப் பது அமுதத்திற் கொப்பாகுமென்று, "ராஜபுத்திரர்" கூறி யுள்ளார்,

படுக்கை காலத்திற்கு "அபிநயம்" என்றும், விழித் தெழுந்த காலத்திற்கு "பிரதிநயம்" என்றும் பெயர். இவை களை "படநம்" "சாடநம்" என்றும் கூறுகின்றனர். இவ் விரண்டு காலங்களும், வைத்தியத்திற்கு தகுதியான காலங் களாம்.

தீபந ஔஷதங்களை இரண்டு காலங்களிலும் கொடுக்க வேண்டும்.

பருக்கவும் இளைக்கவும் புழுக்களைக் கொல்லவும், கொடுக்கும் மருந்துகளை, பிரதிநய காலத்தில் கொடுக்க வேண்டும்.

குதிரை - யானைகளின் ஆஹாரத்திற்கு "விதா" என்று பெயர்.

அக்கினி ஸாமியம் - தோஷஸாமியம் - தாதுஸாமியம் - மலச்சிக்கலில்லாமை - இந்திரியங்களில் தெளிவு, தெளிந்த மனது, இவைகளையுடைய யானை, நல்ல நிலையிலுள்ளதாகும் என்று அறிவாளிகள் கூறுகின்றனர்.

முப்பது பலம் கொண்ட கபளம் உத்தமமாகும். இருபத்தைந்து பலம் கொண்டது மத்திமமாகும். இருபது பலம் கொண்டது அதமமாகும்.

வியாதியுள்ள யானைக்கு, இருபது பலங்கொண்ட ஔஷத கபளம் கொடுக்கவேண்டும். நல்லநிலையிலுள்ள யானைக்கு, பத்துப் பலம் கொண்ட ஔஷத கபளம் கொடுக்கவேண்டும்.

மேலே கூறிய அளவை ஆறு பாகமாகச் செய்து, ஆறு காலங்களில் கொடுக்கவேண்டும்.

வரட்சியுள்ள யானைக்கு முதலில் எண்ணை தேய்த்துப் பிறகு ஔஷதத்தை எண்ணையுடன் கலந்து கொடுக்கவேண்டும்.

தீபந ஔஷதத்திற்கு முந்தியாவது பிந்தியாவது தண்ணீர் கொடுக்கவேண்டும்.

வியாதியின் துவக்கத்தில் தோஷ பலத்தை அறிந்து கொண்டு, பிறகு ஔஷதத்தைக் கொடுக்கவேண்டும்.

உத்தம வயதும் ஸமாக்கினியுமுள்ள யானைக்கு, முப்பது பலம் மருந்தை, ஆறு பாகமாகச் செய்து, ஆறு காலங்களில் கொடுக்கவேண்டும்.

அக்கினி பலம் குறைந்திருந்தால் குறைத்தும், கூடுதலாக இருந்தால் கூட்டியும் கொடுக்கவேண்டும்.

முப்பது வயதிற்குமேல் எழுபது வயது வரையில் உத்தம வயதாகும். இருபத்தி நான்குக்குமேல் முப்பது வயது வரையில் மத்திம வயதாகும். பத்துக்குமேல் இருபத்திநான்கு வயது வரையில் அதம வயதாகும். எழுபது வயதுக்குமேல் கிழத்தனமாகும்.

கிழட்டு யானைக்கு, மருந்தைக் குறைத்தே கொடுக்க வேண்டும்.

உத்தம வயதைவிட மத்திம வயதுக்கும், மத்திம வயதை விட அதம வயதுக்கும், மருந்தைக் குறைத்தே கொடுக்க வேண்டும்.

இருபது வயதுக்குமேல் எழுபது வயது வரையில், மத கபளம் - தூபம் - லேபனம், இவைகளை உபயோகிக்கவேண்டும்.

எப்பொழுதும் வேலை செய்யும் யானைகளுக்கு, புற்களால் பலத்தையும், மாமிசத்தால் வளர்ச்சியையும், ஆஹாரத்தால் ஸந்தோஷத்தையும் உண்டுபண்ண வேண்டும்.

பயிற்சியால் திறமையும், புற்களால் வலிமையும், மாமிசத்தால் மாமிச பலவிருத்தியும், ஆஹாரத்தால் தெளிந்த மனதும், தெளிந்த மனதால் தாதுக்களில் தெளிவும் உண்டாகின்றன. தாதுக்களின் தெளிவே ஆரோக்கியமாகும்.

ஸௌமிய குணம், ஸமாக்கினி, ஸமதாது, புலன்களில் தெளிவு, தெளிந்த மனது, இவைகளுள்ள யானை, நல்லநிலை யிலுள்ளதாம்.

நல்ல நிலையிலுள்ள யானைக்கு, தோஷஹரமான ஔஷதங்களைக் கொடுக்கக் கூடாது.

கஜ வைத்தியம் ஸம்ஞையும் பரிபாஷையும் முற்றும்.

# கஜ ஆஹார பதார்த்த குண பிரமாணம்.

— o —

| | |
|---|---|
| 8 மதூலிகை | 1 ஸர்ஷபம். |
| 8 ஸர்ஷபம் | 1 யவை. |
| 4 யவை | 1 காகிநீ, |
| 4 காகிநீ | 1 மாஷம். |
| 4 மாஷம் | 1 சாணம். |
| 4 சாணம் | 1 ஸுவர்ணம். |
| 4 ஸுவர்ணம் | 1 பலம். |
| 4 பலம் | 1 குடுபம். |
| 4 குடுபம் | 1 பிரஸ்தம். |
| 4 பிரஸ்தம் | 1 ஆடகம். |
| 4 ஆடகம் | 1 துரோணம். |
| 16 துரோணம் | 1 காரீ. |

என்பது மாகத அளவாகும். இனி ரஸ பதார்த்தங்களின் அளவைக் கூறுகிறேன்.

ரஸம் ஐந்து குடுபம் கொண்டது ஒரு படியாகும். பதி மூணரைப் பலம் ஜலம் ஒரு படியாகும்.

ஒரு துரோணத்தில், பத்துப் பலம் மருந்துப் பொடி கொடுக்கவேண்டும். ஒரு துரோணத்தில், இருபது பலம் மருந்து விதிக்கப்படுகிறது. ஒரு துரோணத்தில், எண்ணெ அரை ஆடகமாகும்.

யானைகளுக்கு உடம்புக்குத் தடவுவதற்கு, எண்ணெ அரைப் படி கூறப்படுகிறது. உடம்பு முழுமையும் தடவுவதற்கு, இரண்டு படி கூறப்படுகிறது.

மத யானையின் அண்டகோச சுத்திக்கு, பூங்காவி கலந்த நெய், ஒரு குடுபம் கொடுக்கவேண்டும்.

அங்குசத்தாலுண்டான காயங்களை ஆற்றுவதற்கு, மைப் பொடி அரை குடுபமும், நெய் ஒரு குடுபமும் கொடுக்க வேண்டும். தீபம் ஏற்றுவதற்கு, ஒரு குடுபம் எண்ணை கொடுக்க வேண்டும்.

ஒரு துரோணாம் ஆஹாரத்தில், பத்துப் பலம் வெல்லமும், பத்துப் பலம் உப்பும், இரண்டு படி நல்லெண்ணையும் சேர்க்க வேண்டும்.

மாலையில் மாமிசம், ஸ்நேகம், ரஸங்கள் கலந்த அன்னத்தைக் கொடுக்கவேண்டும்.

தீபன சக்தியுள்ள யானைக்கு, முன் பகலில் மாமிசமும் வெல்லமும் கலந்த அன்னத்தைக் கொடுக்கவேண்டும்.

ஸ்நேஹ (பசையுள்ள) பதார்த்தங்களில் "நெய்" சிறந்தது. மதுரமானது. குளிர்ச்சியானது. லகுவானது. தாபத்தைக் கொடுக்காது. வாதபித்தங்களில் ஹிதமானது. ஊந்தண்ணையும் சுக்லத்தையும் விருத்தி செய்யும் - தீபனமாம். பலத்தையும் ஆயுளையும் கொடுக்கும். கண்ணுக்கு நல்லது. பித்த சரீரமுள்ளது - நோஞ்சல் குட்டி - காலில் வலு வில்லாதது நேத்திர ரோகமுள்ளது - புதிதாகப் பிடிக்கப் பட்டது - இவைகளுக்கு நெய் மிகவும் நல்லது. நிறமும் - மணமும் - சுவையுமுள்ள நெய், பலம் - நிறம் - வேகங்களைக் கொடுக்கும். தந்தம் வளரும்.

நாட்பட்டது, முறுகியது, துர்க்கந்தமுள்ளது, பாத்திரத் தால் கெட்டது, பூச்சி விழுந்தது முதலிய தோஷமுள்ள நெய்யைக் கொடுக்கக் கூடாது. கொடுத்தால் யானையின் பலம் குன்றும். உணவை எடுக்காது.

கண்ணீர் வடிப்பது, வழி நடப்பது, ரக்தம் - மதம் - மாமிசங்கள் குன்றியது, நிலை தவறியது, உடல் குத்திட்டுப் போனது, இத்தகைய யானைகளுக்கு, நெய் உடம்புக்கு மிக ஒற்றுமையானது என்று, "கலிங்கேசுவரர்" கூறுகிறார்.

நெய்க்கு அடுத்தபடியாக, "நல்லெண்ணெ" சிறந்ததென முனிவர்கள் கூறுகின்றனர். நல்லெண்ணெ தோலுக்கு நல்லது. பருகலாம். தாபந்தரும். உஷ்ண வீரியமுள்ளது. கசப்பும் தித்திப்புமுள்ளது, வாதம் - சிலேஷ்மத்தைக் கண்டிக்கும். பாகத்தால் உரப்புள்ளதாகும். பித்தமுள்ளது. புழுக்களைக் கொல்லும். ஊழச் சதையைக் கரைக்கும். பயிற்சியின்றி உதித்தது, வாத தோஷமுள்ளது, நிறமை குன்றியது, வாத-சிலேஷ்ம சரீரமுள்ளது, எப்பொழுதும் பாரம் சுமப்பது, நடையால் மாமிச புஷ்டி சிதைந்தது, வயிற்றில் புழுவுள்ளது, இத்தகைய யானைகளுக்கு, நல்லெண்ணெ கொடுக்கவேண்டும்.

பெண் யானைகள், அதிக வாதமுள்ள சரீரமுள்ளவைகள். ஆதலால், அவைகளுக்கு எப்பொழுதும் நல்லெண்ணெயே விதிக்கப்பட்டிருக்கிறது.

நல்லெண்ணெ கலந்த சோறு, உத்ஸாஹத்தையும் தேஜோ பலத்தையும் உண்டுபண்ணும். எண்ணெ கலந்து முறையுடன் கொடுக்கப்படும் ஆஹாரம், உடலை வளர்க்கும். ஜாடராக் கினியை விருத்தி செய்யும். ஆஹாரத்தை ஜீரணம் செய்யும்.

பாத்திர தோஷத்தால் இத்துப்போனது (பசையற்று ஜலம் போலானது), பூச்சிகள் விழுந்து கெட்டுப்போனது, கசப்பு — புளிப்புப் பண்டங்கள் சேர்ந்தால் கெட்டுப்போனது, இத்தகைய நல்லெண்ணெ, அதிஸாரத்தை யுண்டுபண்ணி, உடல் நிறத்தைக் கெடுத்துவிடும். ஆகையால், தோஷமுள்ள எண்ணெயைக் கொடுக்கக்கூடாது.

"ஊந்தண்" வாதஹரம், தித்திக்கும். ஆண்மையுண்டு பண்ணும். பாகத்திலும் தித்திக்கும். பலத்தையும் நிறத்தையும் உண்டுபண்ணும். தாதுவஹ நாடிகளில் தடங்கலை நீக்கும். பிடரிப் பிடிப்பு - கழுத்துப் பிடிப்பு - அங்கங்கள் முறிந்தோ உடைந்தோ சிதைந்தோ இருத்தல், இவைகளுக்கு, ஊந்தண் சிறந்ததாகும்.

"மஜ்ஜை" (எலும்பினுள் உள்ள ரஸம்.) வாதஹரமாகும். பலம் - கபம் - சுக்கிலம் - ஊந்தண் - இவைகளை விருத்தி செய்யும். உஷ்ண பதார்த்தத்துடன் சேர்ந்தால், உஷ்ண வீரியமாகும். நாடிகளை சுத்தம் செய்யும்.

எண்ணெயில் பாதியளவு நெய் கொடுக்க வேண்டும். நெய்யில் பாதியளவு திரிவிருதம் கொடுக்கவேண்டும். மஜ்ஜையும் - ஊந்தண்ணும் உசிதம்போல் கொடுக்கவேண்டும்.

வர்தமான வயதில் ஆஹாரத்தில், உயர்ந்த அளவு நல்லெண்ணெயைச் சேர்க்கவேண்டும். ஸ்தித வயதில் கால்பங்கு குறைவாகவும், க்ஷயவயதில் அரைப்பங்கு குறைவாகவும் கொடுக்கவேண்டும்.

மார்பில் அடிபட்டதற்கும் எலும்பு முறிந்ததற்கும், ஊந்தண்ணும் - மஜ்ஜையும் கொடுக்கவேண்டும்.

உத்தம கஜத்திற்கு 32-ஆடகமும், மத்திம கஜத்திற்கு 28-ஆடகமும், அதம கஜத்திற்கு 24-ஆடகமும் கொடுக்க வேண்டும்.

உத்தமாக்கினியுள்ள யானைக்கு ஸ்நேஹபதார்த்தத்தை ஏழுநாள் குடிக்கக் கொடுக்க வேண்டும். மத்திமாக்கினிக்கு ஐந்துநாளும், மந்தாக்கினிக்கு மூன்று நாளும், கொடுக்க வேண்டும். பிறகு, மலம் கழிந்து உடல் சுத்தமாகும்.

வெல்லம் கலந்த எள்ளு, பால், பிண்ணாக்கு, தயிர், இவைகளைக் கலந்து கொடுத்துவிட்டு, பிறகு பானங்களைக் கொடுத்துவந்தால், உடல் பருக்கும்.

ஒரு துரோணத்திற்கு, எருமை முதலிய மிருகங்கள், காட்டுமிருகங்கள், ஜலசரஜந்துக்கள், பக்ஷிகள், இவைகளின் மாமிசம் 50-பலமாகும். அத்துடன் பஞ்சலவணமும் திரிகடுகமும் சேர்க்கவேண்டும்.

பன்றி, செம்மறியாடு, எருமை, முயல், வெள்ளாடு, மான், இவைகள் மிருகங்களாம்.

நல்ல நிலையிலுள்ள யானைகளுக்கு, இவைகளை ரஸத்திற்காகக் கொடுக்கவேண்டும்.

பன்றி - எருமை முதலியவை - கோழி - கழுதை - ஒட்டகம்- முதலை - முள்ளம் பன்றி - உடும்பு - பசு - நரி - ஆடு - இவைகளின் மாமிசங்களுடன், புளியும் உப்பும் சேர்த்து, மாதுளை ரஸங்கலந்து, கபளமாகக் கொடுக்கவேண்டும்.

யானைகளுக்கு, முழும் ஒன்றுக்கு ஒரு ஆடகம் வீதம், ரஸபதார்த்தம் கொடுக்கவேண்டும். ஜலக்கரைகளிலும் ஜலம் இல்லாத இடங்களிலும் வஸிக்கும் மிருகாதிகளின் ரக்தத்தையும் கொடுக்கவேண்டும்.

ஜலமற்ற இடங்களிலுள்ளவைகளின் மாமிசம் கசப்பாக இருக்கும். ஜலப் பிரதேசங்களில் வசிப்பவைகளின் மாமிசம் புளிப்பாக இருக்கும். குட்டிகளின் மாமிசம் மிருதுவாகவும், சிலேஷ்மமுள்ளதாகவும் இருக்கும்.

விஷத்தினலாவது வியாதியினலாவது இறந்தவைகளின் மாமிசத்தையும் சவ நாற்றமுள்ள மாமிசத்தையும் கொடுக்கலாகாது.

நல்ல ஸ்திதியும் யௌவனப் பருவமுமுள்ளவைகளின் மாமிசம், வேசவாரம் (திரிகடுகம் - மல்லி - ஜீரகம் - மாதுளை - திப்பிலிமூலம் இவைகளுக்கு, வேசவாரம் என்று பெயர்), ரஸ பதார்த்தம் இவைகள், யானைகளுக்கு ஹிதமானவைகளாம்.

ரஸங்களின் ஸம்ஸ்காரத்திற்காக ஒரு பலம் திரிகடுகம் சேர்க்கவேண்டும்.

கஜங்களின் ஆஹாரத்தில், ஒரு துரோணத்திற்கு ஒரு குடுபம் நல்லெண்ணையும், அரை ஆடகம் தயிரும் சேர்த்துப் பிணைந்து கொடுக்கவேண்டும்.

யானைக்கு, முழம் ஒன்றுக்கு,

| | |
|---|---|
| புல். | ஒரு பாரம். |
| அரிசி. | நான்கு ஆடகம் |
| நல்லெண்ணை. | அரை குடுபம். |
| வெல்லம். | பத்துப்பலம். |
| உப்பு. | பத்துப்பலம். |

வீதம் சேர்க்கவேண்டு மென்று கூறப்பட்டிருக்கிறது.

விதிப்படி ஆஹாரம் கொடுத்துவந்தால், முறையே, ரஸம்-ரக்தம் - மாமிசம் - மேதஸ்ஸு - எலும்பு - மஜ்ஜை - சுக்கிலம் - இவைகள் உண்டாகும். அதனால் ஸந்தோஷமும் மதமும் உண்டாகும். அவைகளால், ஜயமும் சோபையும் ஆரோக்கியமும் உண்டாகும்.

யானைகளுக்கு, முறையோடு ஆஹாரம் கொடுத்து வந்தால், தைலம், நெய், பால், மாமிசம், ரஸம், மத்தியம், இவைகளைக் கொடுக்கவேண்டியது அவசியமில்லை. சுத்தமான அன்னம், புல், இவைகளால் மட்டிலும் சுகமாக இருந்துவரும்.

யானைகளுக்கு, உத்தமவயதில் புல் தைலத்தை அரை ஆடகமும், மத்திம வயதில் கால் பாகம் குறைவாகவும், அதம வயதில் மூன்றில் ஒரு பாகம் குறைவாகவும், கொடுக்க வேண்டும். அதனால் பலம் - மதம் - வேகம் இவைகளுண்டாகும். வியாதியையும் கண்டிக்கும்.

பலஹீநம், இளைப்பு, அக்கினி மாந்தியம், வாதோபாதி, அடிபட்டதால் கபாதிக்கம், இவைகளுள்ள கஜங்களுக்கு, கபாதிக்க காலத்தில், புல்லைக் கொடுக்கலாகாது.

வாதாதிக்கமான காலத்தில், தோஷம் நீங்கி, தாது விருத்தியுண்டாகவேண்டி, புல்லை விசேஷமாகக் கொடுக்க வேண்டும்.

மோதகம் செய்வதற்கு ஆஹாரத்திற்குக் கூறிய அளவு எண்ணையும், வாயுவிடங்கம் - வெல்லம் - கொள்ளு - உளுந்து - கோதுமைகளால் ஸம்ஸ்காரம் செய்யப்பட்ட மாவு ஒரு ஆடகமும் கூறப்பட்டிருக்கிறது.

யானைகளின் ஆஹாரமானது, போஜியம் - பக்ஷியம் - லேஹியம் - பேயம் என்று நான்கு வகையாகும்.

ஸம்ஸ்கிருதம் - அஸம்ஸ்கிருதம் என்று, போஜியம் இரண்டு வகையாகும்.

மாமிசம் - ரஸம் - ஸ்நேஹம் - தயிர் - பால் - இவைகள் சேர்ந்த அன்னத்திற்கு ஸம்ஸ்கிருதம் என்று பெயர்.

ரஸாதிகள் சேராத அன்னத்திற்கும், அரிசிக்கும் அஸம்ஸ்கிருதம் என்று பெயர்.

கபளம் - இலைகள் - கிளைகள் - தோலிகள் - வேருகள் - புதருகள் - இவைகள் பக்ஷியமாம்.

கஞ்சி - பால் - மோரு முதலியவைகள் - ஸம்ஸ்கிருத அஸம்ஸ்கிருத ஸ்நேஹங்கள் - யமகம் - திரிவிருதம் - மஹா ஸ்நேஹம் - இவைகளுக்குப் பேயம் என்று பெயர்.

எண்ணை - நெய் - இரண்டிற்கும், யமகம் என்று பெயர். எண்ணை - நெய் - வஸை - மூன்றுக்கும் "திருவிருதம்" என்று பெயர்.

பக்குவம் செய்யப்படாத தைலம் - மாமிசம் - ஊந்தண் - மஜ்ஜை - ரஸம் - மேதஸ்ஸு - இவைகளுக்கு "மஹா ஸ்நேஹம்" இவைகளுக்கு "பேயம்" என்று பெயர்.

உத்காரிகை - வேசவாரம் - மோதகம் - இவைகளுக்கு "லேஹியம்" என்று பெயர்.

சாரைப்பருப்பு - தாமரை - பேரீச்சை - இலுப்பை - பலா - இவைகளைத் தூள் செய்து, கல்கண்டும் சர்க்கரையும் சேர்த்து,

நெய்யில் பாகம் செய்யவேண்டும். இதற்கு "உத்காரிகை" என்று பெயர்.

கோதுமை மாவு - திப்பிலிப்பொடி - நெய் - வெல்லம் - இவைகளைக் கலந்து பக்குவம் செய்ய வேண்டும். (மற்றொருமுறை).

ஸத்துமா - சுக்கு - கோரைக்கிழங்கு - தாமரைக் கிழங்கு - இவைகளைத் தூள் செய்து, மிளகு - நெய் - வெல்லம் சேர்த்துப் பாகம் செய்யவேண்டும். இதற்கும் "உத்காரிகை" என்று பெயர்.

பசையுள்ள மிருதுவான மாமிசத்தை எலும்புடன் அம்மியில் அறைத்து, திரிகடுகம் - வெல்லம் - நெய் கூட்டி பாகம் செய்யவேண்டும். அதில், வருஷ - கிரீஷ்ம - சரத் - ருதுக்களில் காடியைத் தெளித்தும், மற்ற ருதுக்களில் ஜலத்தைத் தெளித்தும், அடுப்பிலிருந்து இறக்கவேண்டும். இதற்கு, "வேசவாரம்" என்று பெயர். இது மதமில்லாதவைகளுக்கு மதத்தையுண்டுபண்ணும். மதமுள்ளவைகளுக்கு மதத்தை விருத்தி செய்யும்.

கஜ ஆஹார பதார்த்த குண பிரமாணம் முற்றும்.

# பக்ஷியபேயாதி பதார்த்த குணதோஷம்.

ஜலம் கலந்த தைலம், வாதரோகத்தைக் கண்டிக்கும். பாலுடன் கூடிய நெய், பித்தஹரமாகும். குட்டிகளை வளர்க்கும். ஊந்தண் கலந்த மஜ்ஜை, அங்கம் முறிந்ததற்கும் மார்பிலடிபட்டதற்கும் ஆறுதலாம். மாமிசங்கள், வளர்ச்சியையும் பலத்தையும் தீபனத்தையும் கொடுக்கும்.

**மத்தியமானது,** தீபனம் - லாகவம் - மனத்தெளிவு - பௌருஷம் - வீரியம் - இவைகளை விருத்தி செய்யும். உடலை வளர்க்கும். புழுக்களைக் கொல்லும். தைலம் கலந்து கொடுத்தால், சிலேஷ்மத்தைக் கண்டிக்கும். ஊழச்சதை - வாத ரோகம் - மனக்கலக்கம் - முதுகெலும்பில் அடி - நழுவிய மார்பு - இத்தகைய தோஷங்களுள்ளவைகளுக்கு, திராக்ஷையும் எண்ணெயும் கலந்து கொடுக்கக் குணமாகும். நடையால் களைத்தது, கட்டுண்டு அடிபட்டுத் துன்பமடைந்தது, யுத்த காரியமாக விரைவாக அனுப்பப்பட்டது, இவைகளுக்கு, வெல்லம் கலந்து கொடுக்க வேண்டும். சண்டையில் தாக் குண்டதற்கு உப்பு நீங்கிய ஐந்து வித சுவையுள்ள ரஸங்கள் கலந்த மத்தியத்தைக் கொடுக்க வேண்டும்.

வர்த்தாநாஹம் (சுழித்த வயிற்று வீக்கம்) - அக்கினி மாந்தியம் - மிருத்திகா நாகம் - இவைகளுக்கு, மத்தியத்தில் உப்பைக் கலந்து கொடுக்க வேண்டும். (ஆநாஹம் - மல மூத்திர பந்தம்.) களைப்பு - மலமூத்திரதோஷம் - அருசி - ஆமாசய தோஷம் - இவைகளுக்கு, விசேஷமாக மத்தியத்தைக் கொடுக்கவேண்டும்.

தீயினாலும் - பாத்திரத்தாலும் கெட்டுப்போன மத்தி யத்தைக் கொடுக்கக்கூடாது.

சுத்தமான எண்ணெ - நெய்யின் எடு - அரளிப்பூ - நீலம் - தாமரை மலர் - இவைகளின் நிறமும், நல்ல மணமும், கசப்பும் தித்திப்பும் கலந்த நறுசுவையும், கலப்படமும் கெடுதியுமில்லா மல் பலகரமுமான மத்தியத்தையே கொடுக்கவேண்டும்.

நல்ல நிலையிலுள்ள யானைக்கு, எல்லாப் பானங்களிலும் மத்தியம் கலந்து கொடுப்பது நல்லது.

ஆஹாரத்தில், கால் பாகம் மத்தியமும், வீசம் பாகம் திராக்ஷையும் சேர்க்க வேண்டும்.

**பாலின் குணதோஷம் :—**

பசு - எருமை - ஆடு - இவைகளின் பாலை தயிருடன் கலந்து கொடுப்பது நல்லது. பாலானது குளுமையும்

இனிப்பும் நெய்ப்பும் உள்ளது. உடலை வளர்க்கும். பிராண சக்தி - ஆயுள் - ஆண்மைகளை யளிக்கும். உடனே பலந்தரும். அக்கினி தீபனமாம். இது சிறந்த ஔஷதமாகும்.

தித்திப்பும் நெய்ப்புமுடையதாகையால், வாதரோகத்தைப் போக்கும். குளிர்ச்சியும் தித்திப்புமுடையதாகையால், பித்தத்தைப் போக்கும். இது, ரக்த பித்தத்திற்குச் சிறந்த மருந்தாகும். கபத்தையும் கண்டிக்கும். பாலுடன், மாமிசத்தையும் நெய்யையும் கலந்துகொடுப்பது நல்லது. அதனால் நரையும் மயிரும் தெளிவடையும். மாமிசம் வலுப்பெற்று வளரும்.

ஜலமோ புளிப்போ கலந்தது, இரவு வைத்து பழசாகப் போனது, பாத்திரத்தால் கெட்டுப்போனது, இத்தகைய பாலானது தாகம் - வாந்தி - அக்கினி மாந்தியம் - இவைகளை யுண்டுபண்ணும்.

புதிதாகக் கறந்த கலப்பில்லாத பாலானது மேகலிதமான குணமுமுள்ளதாம்.

வாத ரோகங்களுக்குப் பால் நல்லது. கழுத்துப் பிடிப்பு-முகவாய்க்கட்டைப் பிடிப்பு - வாந்தி - பிரதானம் - (வாதரோக விசேஷம்.) மண்டைக்கொதிப்பு - எலும்பு முறிவு - களைப்பு - வீக்கம் - வயிற்றுவலி - யோநிசூலை - இவைகளுக்குப் பால் மிகவும் நல்லது.

மதப் பெருக்கால் இளைத்தது, வயதானது, இளைத்தது, வேலையிலீடுபட்டது, நிலைதப்பியது, பலஹீநமானது, பிராண பலம் குன்றியது, தீக்ஷ்ண கபளங்களால் தாபமடைந்தது, துன்பமுற்றது, பித்தம் மேலிட்டது, மதமுள்ளது, இவைகளுக்குப் பாலைக் கொடுக்கவேண்டும். தாபத்தையும் வாதத்தையும் கண்டித்து அக்கினிதீபனத்தை உண்டுபண்ணும்.

பாலை, முழும் ஒன்றுக்கு ஒரு ஆடகம் வீதம் கொடுக்க வேண்டும்.

தயிரின் குணதோஷங்கள் :—

வாதம் - பித்தம் - சிலேஷ்மம் மூன்றும் அதிகமாயுள்ள யானைகளுக்கு, முன் கூறிய முறைப்படித் "தயிரை"க் கொடுக்கவேண்டும்.

புளித்த தயிர், தாபத்தையும் கனதியையும் உண்டு பண்ணும். நொசநொசத்த தயிர், கபத்தையும் பித்தத்தையும் அதிகரிக்கச் செய்யும்.

ஆடையுடன் கட்டியான மணமுள்ள தயிரானது, உடனே பலத்தைத் தரும்.

தித்திப்பான தயிர், தீபனம் - ஆண்மை - பலங்களைக் கொடுக்கும்.

தயிரானது பாகத்தினால் உரப்புள்ளதாகும். அது, புழுக்களைக் கொல்லும். அங்கங்களை ஒன்றுபடச் சேர்க்கும். ஸகல ரோகங்களையும் போக்கும். இதன் சக்தியை நினைக்க வொண்ணாது.

தேனின் குணம் :— தேன் உடலைச் சுண்டவைக்கும். சீதளமானது. வரட்சியை உண்டுபண்ணும். மதுரமானது. இளைக்கும். கபத்தையும் பித்தத்தையும் கண்டிக்கும்.

வாந்தி - அதிஸாரம் - விஷோபாதி - கபம் - மாமிச விருத்தி - இவைகளுள்ள யானைக்கு, எப்பொழுதும் தேனைக் கொடுக்கவேண்டும்.

கரும்பின் குணம் :— கட்டுண்டும் வழி நடந்தும் களைப் புற்றது - பித்தாதிக்கமுள்ளது - வியாதியுள்ளது - கெட்ட மனதுடையது - ஆகிய யானைகளுக்கு, "கரும்பு" நல்லது. தித்திப்பான கரும்பு பித்தத்தைப் போக்கும். மதம் - சுக்கிலம்- தாது - ஊந்தண் - மாமிசம் - ரக்தம் - இவைகளை விருத்தி செய்யும்.

கிரீஷ்மம் - சரத் காலங்களில் மூன்று நாளும், வருஷா காலத்தில் ஏழுநாளும், வஸந்தகாலத்தில் பத்து நாளும்

ஹேமந்த சிசிரகாலங்களில் பதினைந்து நாளும், யானைகளுக்குக் கரும்பு கொடுக்கவேண்டும்.

உத்தம கஜங்களுக்கு 500 கரும்புகளும், மத்திம கஜங்களுக்கு 350 கரும்புகளும், அதம கஜங்களுக்கு 250 கரும்புகளும் கொடுக்கவேண்டும்.

**அங்கஸேசநவிதி** :—கட்டுண்டு துன்புறுவதாலும் - இசைகேடாகத் திரும்புவதாலும் - மேடு - பள்ளம் சகதிகளில் ஓடுவதாலும், இடறிக் கொள்ளுவதாலும், அடிபடுவதாலும், யானைகளுக்கு அங்கங்களில் பிடிப்பு உண்டாகிறது.

விபரீத ஆஹாரம் - விருத்தமான படுக்கை - ஸங்கட பிரதேசங்களில் நடை - கெட்ட இடங்களில் வாஸம் - இவைகளால் யானைகளுக்கு ரோகங்கள் உண்டாகின்றன.

அவைகளின் அங்கங்களில், தைலம் அல்லது ஊந்தண்ணைச் செதும்பப் பூசவேண்டும். அதனுல் அங்கங்கள் மிருதுவாக ஆகும். வீக்கமும் வடியும்.

பாதங்களில் எப்பொழுதும் எண்ணையும் ஊந்தண்ணும் தடவி வந்தால், நகமும் உள்ளங்காலும் வெடிக்காது. குறைவு ஏற்படாது. நடையில் கால் பொசுங்காது. கண் பார்வை குறையாது.

திரிபலாசூரணத்தை எண்ணையில் கலந்து கால்களில் தடவிவந்தால், ஊந்தண் வடியாது, க்ஷயம் வராது, கொப்பளங்கள் வெடிக்காது. பாதங்கள் வலுப்பெற்றிருக்கும்,

உடல் முழுமையும் எண்ணை தேய்ப்பதால், சர்மதோஷம், கட்டிப்போடுவதாலும் வதைப்பதாலும் உண்டாகும் தோஷம், காயம், வரட்சி, பிடிப்பு, சீதபாதை, வாதபிரகோபம், இவைகள் நீங்கும். துடையும் அங்கங்களும் மிருதுவாகும். உடல் வளரும். பளபளப்பு - ஸத்துவம் - பலம் - ஸௌக்கியம் - இவைகள் உண்டாகும்.

தலையில் எண்ணெ தேய்ப்பதால், மண்டைக் காயம் ஆறும். கண்களில் கலக்கமிராது. தந்தங்களில் எண்ணெ தடவுவதால் எஃறு உறுதியாகும். தந்தங்கள் வலுப்பெற்று இடிக்கும் உறுதியுள்ளதாகும்.

மதங்கொண்ட யானைக்கு மூத்திரம் சிந்திக்கொண்டே இருக்கும். அதனல் கோசம் வெந்துபோகும். ஆகையால், ஒரு பலம் பூங்காவியை நெய்யில் குழைத்து கோசத்தில் பூச வேண்டும்.

யானைக்கு நெய் தேய்ந்துக் குளிப்பாட்டுவது நல்லது. அதனல் நேத்திரரோகம் வராது. கூர்ந்த பார்வையுண்டாகும். ஜலம் மரங்களுக்கு வலுவைக் கொடுப்பதுபோலத் தைலம் யானைகளுக்குப் பலத்தைக் கொடுக்கும்.

கோடைகாலத்தில், தேள் - ஓணன் - பல்லி - வாந்திகரமான புழுக்கள் - ஆபத்தை யுண்டுபண்ணும் கொடிய விஷமுள்ள பாம்புகள் - முதலியவைகள், கஜசாலையில் புகும். யானை, அவைகளை அறியாது தின்றுவிடும். அதனல் மிகவும் துன்பமடையும். இத்தகைய ஆபத்து நேராமலிருக்க வேண்டி, கஜசாலையில் தீபம் போடவேண்டும். தீபத்திற்கு ஒரு குடுபம் எண்ணெ கூறப்பட்டிருக்கிறது.

உப்பின் குணம் :—

உப்பு. தீபனகரம். ஜீரணகரம். புழுக்களைக் கொல்லும். வாதரோகத்தைக் கண்டிக்கும். உப்புத்தின்ற யானை தண்ணீர் குடிக்கும்.

ரக்தத்திற்கு மூலகாரணம் ஜலம். அது தேஜஸ்ஸால் (ரஞ்சக பித்தத்தால்) சிவப்பாக ஆகிறது.

தீயானது விறகை சாம்பலாக்குவதுபோல, உப்பானது ஆஹாரத்தை பஸ்மமாக்கும். இரவு பகல்களிலுண்டாகிய தோஷங்களை நாசம் செய்யும். அத்தியாஹாரத்தை ஜீரணம் செய்யும். அருசியைப் போக்கும். தைப்பை உண்டுபண்ணும். உப்பு, அமுதம்போல் அநுகூலமானதாகும்.

முற்பகல் ஆஹாரத்தில் உப்பைச் சேர்க்கலாகாது. சேர்த்தால் தோஷத்தை யுண்டுபண்ணும். பிற்பகலில் சேர்க்க வேண்டும், பிற்பகலில் சேர்த்தால் தோஷங்களைப் போக்கும்.

ஹேமந்த ருதுவில், பத்திரம் - மந்தம் - மிருகம் - மிச்சிரம்- ஆகிய ஜாதி யானைகளுக்கு, முழம் ஒன்றுக்கு, முறையே, 10, 8, 7, 5 பலம் வீதம், உப்பைச் சேர்க்க வேண்டும்.

சரத் - கிரீஷ்ம காலங்களில், அதில் பாதியளவும், வஸந்த - வருஷா காலங்களில் கால் பங்கும் சேர்க்கவேண்டும்.

கபவாதமுள்ள வஸந்தத்தின் பின்பகுதியிலும், ஹேமந்த- சிசிர - ருதுக்களிலும், மரம் - கிளை - செடி - கொடி - புல் - பயிர்- இவைகளைத் தின்று, யானைகள் கனத்திருக்கும். அப்பொழுது, உப்புச்சேராத ஆஹாரமானது, மந்திரமில்லாத யஞ்ஞாக்கினி யைப்போல், பலவித தோஷங்களை யுண்டுபண்ணும். அஜீர ணத்தை யுண்டுபண்ணும். உப்பற்ற உணவு, மண்ணைத் தின்பது போலாகும். பல கேடுகளை விளைவிக்கும்.

ரோமகம் (சுத்தி செய்யாத உப்பு) - இந்துப்பு - கரியுப்பு - வளையலுப்பு - ஸர்ஜக்ஷாரம் - யவக்ஷாரம் - சோத்துப்பு - அட்டுப்பு - இந்த எட்டு உப்புக்களையும், யானைகளுக்கு, முறையுடன் கொடுக்க வேண்டும்.

முழம் ஒன்றுக்குப் பத்துப் பலம் சோத்துப்பும், மற்ற உப்புக்கள் ஐந்து பலமும் கொடுக்க வேண்டுமென்று கூறப் பட்டிருக்கிறது.

**தானியங்களின் குணம் :—**

விரீஹிதானியம் - சம்பாப்பயிர் - அறுபதாங் குருவை - இவைகள் சிறந்த உணவாகும். யவையும் - கோதுமையும் மத்திம ஆஹாரமாகும். பயறு - உளுந்து - கேழ்வரகு - சீனத்து நெல் (கங்குதானியம்) இவைகள் அதமமான உணவாகும்.

நன்றாகக் குத்தி சுத்தம் செய்யப்பட்ட தானியங்களும் இவைகளாலான ஆஹாரமும் பலகரமாகும்.

ஒரு படி அரிசி யாலான அன்னம், ஒரு பிண்டம் (கபளம்=உருண்டை) ஆகும்.

வேகாதது - அடிப்பிடித்தது - பொசுங்கியது - அளிந்தது- அதிகச் சூடானது - சில்லிட்டுப்போனது-அளவு குறைந்தது- அளவில் அதிகமானது - ஆகிய ஆஹாரங்கள், யானைகளுக்குக் கேட்டை விளைவிக்கும்.

வேகாதது அதிஸாரத்தையும், காந்தியது மார்வலியையும், பொசுங்கியது பல ஹானியையும், அளிந்தது சீதபேதியையும். அதிகச் சூடானது பித்தத்தையும், சில்லிட்டது வாதத்தையும், குறைந்தது அதிருப்தியையும், அதிக ஆஹாரம் மரணத்தையும், மண் கலந்தது, வாந்தி அருசிகளையும் உண்டு பண்ணும்.

எண்ணெயோ - உப்போ சேராத ஆஹாரத்தை விஷத்தைப் போல் நீக்கிவிடவேண்டும்.

புல்லைத்தின்று திருப்தியடைந்து, தண்ணீர் குடித்து, பின் குளித்து வந்த யானைக்குக் கொடுக்கும் உணவே யனுள்ளதாகும்.

யானைகளும் குதிரைகளும் தின்னும் உணவுக்கு "விதா" என்று பெயர்.

தினந்தோறும் பயிற்சிசெய்யும் யானைகளுக்கு, புற்களால் உறுதியையும், மாமிசத்தால் மாமிசவிருத்தியையும், ஆஹாரத்தால் பிரீதியையும், உண்டுபண்ண வேண்டும்.

யானைகளுக்குப் பயிற்சியால் வேலைகளைச் செய்யும் திறமையும், புல்லால் புஷ்டியும், மாமிசத்தால் பலமும் மாமிச விருத்தியும், அன்னத்தால் நல்ல மனதும், நல்ல மனதால் தாதுக்களில் தோஷமற்ற தெளிவும் உண்டாகிறது. தாதுக்

களின் தெளிவானது எல்லாவிதமான பலங்களிலும் சிறந்த ஆரோக்கியமாகும்.

யானைகளுக்கு, ஹேமந்த - வருஷ ருதுக்களில் எண்ணெயும், வஸந்த ருதுவில் ஊந்தண்ணும் - மஜ்ஜையும், சரத் - கிரீஷ்ம காலங்களில் நெய்யும், பானத்திற்குச் சிறந்ததாகும்.

ஹேமந்த - கிரீஷ்ம காலங்களில், புற்கள் கதிருள்ளதாகவோ காய்ந்ததாகவோ இருந்தால், தைல பானம் கொடுக்கக்கூடாது. ஹேமந்த காலத்தில் குடித்த எண்ணெ ஜீரணமாகாது. கிரீஷ்ம காலத்தில் எண்ணெயைக் குடித்தால், யானைகள் மூர்ச்சையடையும்.

சிலர், ஆஹாரத்தில் எண்ணெயைச் சேர்க்கலாமென்றும், மற்றும் சிலர், ஆஹாரத்திற்கு அநுபாநமாக எண்ணெயைக் கொடுக்கலாமென்றும் கூறுகின்றனர்.

**புல்லின் குணம் :—** யானைகளுக்கு, பசும்புற்களில் ஒரு துரோணம் கொடுக்க வேண்டும். புல் காய்ந்ததாகவோ இலேசாகவோ இருந்தால் இருதுரோணம் கொடுக்க வேண்டும். கதிர்விடும் தருவாயிலுள்ள (ஸகர்பம்) தானல் முக்கால் துரோணமும், பழுத்த புல்லானல் அரைதுரோணமும் கொடுக்கவேண்டும்.

புல்லானது, தாகத்தைத் தணிக்கும். திருப்தியை அளிக்கும். அஜீரணத்தைப் போக்கும். மனத்தெளிவை உண்டுபண்ணும். மூன்றுவித தோஷங்களையும் கண்டிக்கும். ரக்தத்தை சுத்தம் செய்யும். தோஷங்களை மேலடைய விடாது. புல்லினல் பிராணனும் இந்திரியங்களும் வளர்ச்சியடைகின்றன. ஓச்சல் - அலுப்பு - மனச்சோர்வு சோம்பல் - தூக்கமின்மை - இவைகளைப் போக்கும். யானைகளுக்குப் புல்லானது உடலுக்கு உற்ற ஆஹாரமாம். அதுவே உயிர்.

முயற்சியுடன் கொடுத்தும், யானையானது புல்லைத் தின்னுவிட்டால், அது வியாதியுள்ளது என்று அறிந்து கொள்ள வேண்டும்.

ஜலமானது சந்திரனிடத்திலிருந்து உண்டாகிறது. ஜலத்தினால் புற்கள் உண்டாகின்றன. யானைகள் சந்திரஸ்வரூபமானவைகள். அவைகளுக்குக் குளுமையானது உற்றதாகும்.

உத்தராயணகாலத்தில் புற்கள் கிடைக்காததால், யானைகள், இளைத்துப் பிராணபலம் குன்றியவைகளாக ஆகின்றன. தக்ஷிணயன காலத்தில், அப்பொழுது முளைத்த பசும்புற்களைத் தின்று ஸௌக்கியமடைகின்றன.

உத்தராயணத்தில், யானைகளின் பிராணசக்தி குன்றுமலிருக்கும் பொருட்டு, குளுமையைக் கொடுக்கக்கூடிய எல்லாவற்றையும் உபயோகிக்க வேண்டும்.

வருஷா காலத்தில், நீரில் முளைத்த புற்களைக் கொடுக்கக் கூடாது. தரையில் முளைத்த புற்களே சிறந்தவைகளாம்.

ஹேமந்த காலத்தில், நீரற்ற நிலத்தில் முளைத்த புற்களே அநுகூலமானவை.

கிரீஷ்ம காலத்தில், ஸம்ஸ்காரம் செய்யப்பட்ட புற்களும், பானகமும், குளுமையைக் கொடுக்கும். (புல்லிற்கு) ஸம்ஸ்கார திரவியம் காடியும் - மோதகமுமாகும்.

வருஷா காலங்களில் மோதகங்களைக் கொடுக்கவேண்டும்.

(புல்லானது) பாத்ரபத (புரட்டாசி) மாதத்தில் கிளைத்துத் தழைத்து, சிறிது தித்திப்பும் - புளிப்பும் உள்ளதாக இருக்கும். அது பிராண பலத்தை விருத்தி செய்யும். ஆசுவயுஜ (ஐப்பசி) மாதத்தில் சூலுற்று இனிமையாக இருக்கும். கார்திக (கார்த்திகை) மாதத்தில் அன்னம் பிடித்து ரஸமுள்ளதாக இருக்கும். மார்க (மார்கழி) மாஸத்தில் காய்ந்தும் பசுமையாகவும் இருக்கும். அது, மாமிசம் - ரக்தம் - மஜ்ஜை - பிராணன் - இவைகளை வளர்க்கும். பால்குன (பங்குனி) மாஸத்தில், புற்கள் பெருங் காற்றிலடிபட்டு ஸ்வல்ப ருசியும் ஸத்தும் உள்ளதாக இருக்கும். சைத்திர மாதத்தில் புற்கள் பூமியில் விழுந்து காய்ந்து

முறிந்து ருசியற்றதாக இருக்கும். அதை யானைகள் விரும்பாது. வைசாக மாஸத்தில் புற்கள் கெரியைப் போலிருக்கும். அநேகமாக காட்டுத்தீயால் எரிக்கப்பட்டுவிடும். அப்பொழுது, யானைகள் மரங்களையே தின்னும்.

யானைகள், புற்களாலேதான் உத்ஸாகமடையும். ஆகையால், அக்காலத்தில் மரங்களை விசேஷமாகத் தின்றுவிட்டு, வயிறு நிறைய உண்டவன் சிறிது தின்பண்டங்களைத் தின்று ஸந்தோஷமடைவதைப்போல, சிறிதளவு புற்களைத் தின்று ஸந்தோஷமடையும்.

புற்களைத் தின்னாத யானைக்கு ஆஹாரம் - எண்ணை - ரஸம் - நஸ்யம் - வஸ்தி - மருந்து - முதலியவைகளைக் கொடுத்தாலும், அது வாஹந யோக்கியமாக ஆகாது. புற்களைத் தின்னாத யானைகள், ஜீவித்திருப்பதே துர்லபம்.

காடுகளில் யானைகள், செடி-கொடி-இலை-கிளை மரம் புல் இவைகளைத் தின்னுகிறபடியால், அவைகள், அன்னமும் உப்பும் தின்னாமலே, எவ்வித தோஷங்களுமில்லாமலிருக்கின்றன. ஆகையால்தான், அவைகளின் குணங்களுள்ள கபளம்-குவளம் முதலியவைகளைக் கொடுக்கவேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது.

கிராமங்களிலுள்ள யானைகள், பிறர்வசப்பட்டுக் கட்டுண்டு, வதைக்கப்பட்டு, மனம் நொந்தவைகளாயிருப்பதால், புற்களை மட்டிலும் தின்பதனால், அவைகள், எழுந்திருப்பதற்குக்கூட சக்தியில்லாதவைகளாக ஆகின்றன.

ஆகையால், அவைகளுக்கு எண்ணை - பால் - ஆஸவம் ரஸம் - உணவு - புல் - அன்னம் முதலியவைகளைக் கொடுத்து, அவைகள் நல்ல வலுப்பெற்றிருக்கும்படி செய்யவேண்டும்.

வருஷா காலத்தில், நிலத்தில் முளைத்த புற்களையும், மலையில் முளைத்துக் காய்ந்த புற்களையும் கொடுக்கவேண்டும்.

சரத் (ஹேமந்த) காலத்தில். சூலுற்ற புற்கள் உகந்தவைகளாகும்.

சிசிரருதுவில், முடிச்சுக்கள் விழுந்து பழுத்த புற்களைக் கொடுக்கவேண்டும்.

வஸந்த காலத்தில், ஸத்துள்ள அழுத்தமான புற்களைக் கொடுக்கவேண்டும்.

கிரீஷ்மகாலத்தில், ஜலத்தில் முளைத்த எல்லாவற்றையும் கொடுக்கவேண்டும்.

தீப்பட்டுப் பொசுங்கியது - முறிந்தது - நாள்பட்டது மடித்தது - நனைந்தது - துர்கந்தமுள்ளது - சேறுள்ளது - மிருக பக்ஷிகளின் மலம் பட்டது. இத்தகைய புற்கள், அபத்திய மானவைகளாம்.

ஈர்ச்சை - அத்தி - அரசு - பிப்பலீவிருக்ஷம் - இத்தி - முள்ளில்லை - முருங்கை - வாராஹீவிருக்ஷம் - மோதவிருக்ஷம் மா - பலா - ஆல் இவைகளின் கிளைகளுக்குக் "கபளம்" என்று பெயர். இவைகள் பித்தத்தையும், சிலேஷ்மத்தையும் கண்டிக்கும்.

முரள் (சாரப்பருப்பு மரம்) பனை - நாடாமிரம் - விளா - ஆநந்தபாதபம் - கோதுமை - சம்பாப்பயிர் - இவைகளுக்குக் "குவளம்" என்று பெயர். கபத்தையும் பித்தத்தையும் போக்கும்.

யானை வணங்கி - பால் மரங்கள் - இலவு - நாயுருவி அரளி - கொன்னை - சிறுகுமிழ் - மூங்கில் - அதிமேதம் - இவைகளுக்குக் "கடங்கரம்" என்று பெயர். பித்தஹரமாம்.

எல்லா இலைகளுக்கும் "பல்லம்" என்று பெயர்.

**நூண்டின் குணம்** — பூண்டில், புளிப்பு மட்டிலும் இல்லை. ஆகையால் இதற்கு "ரஸோநம்" என்று பெயர். இது மூன்று தோஷங்களையும் போக்கும். மதம் - அக்கினிபலம் ஆண்மைகளைக் கொடுக்கும். மலசோதனம் செய்யும். இது அமுதத்தைப் போன்றது.

கர்ணரோகம் - பாண்டு - வாதாநாஹம் - கழுத்துப் பிடிப்பு பிடரிப் பிடிப்பு - தோள்ப் பிடிப்பு - வயிற்று வலி - மார் வலி இவைகளைப் போக்கும்.

பூண்டை நல்லெண்ணெயுடன் கொடுத்து, தண்ணீரை அநுபானம் கொடுக்கவேண்டும்.

யானைகளுக்கு. வர்ஷாகாலம் - ஹேமந்தகாலம் - சிசிரருது இவைகளில், தத்துரு (அரிப்பையுண்டுபண்ணும் வியாதி) அரிப்பு - வீக்கம் - சிலேஷ்மம் - வயிற்றுப்புழு இவைகள் உண்டாகும். அப்பொழுது, பூண்டுடன், நெய் - நல்லெண்ணெ திரிகடுகம் - வாயுவிடங்கம் இவைகளைச் சேர்த்துக் கொடுத்து, சுத்த ஜலத்தை அநுபானமாக கொடுக்கவேண்டும்.

யானைகள், கிரீஷ்ம - சரத் காலங்களில், ரக்தபித்தம் மேலிட்டவைகளாக இருக்கும். அதைப்போக்குவதற்கு, அப் பொழுது, அவைகளுக்கு, கால்பங்கு அல்லது அதிலும் குறைவான ஆஹாரத்துடன், பூண்டு - திராக்ஷை - சர்க்கரை இவைகளைக்கலந்து கொடுக்கவேண்டும்.

பூண்டை ரோகஹரமாகக் கொடுக்கும்பொழுது, முழுத் திற்கு 20 பலம் வீதம் கொடுக்கவேண்டும்.

உள்ளிப்பூண்டின் வேரில் கசப்பும், விதையில் தித்திப்பும், இலையில் துவர்ப்பும், இலை நுனியில் உரப்பும், குருத்தில் உப்பும் இருக்கிறது. வெய்யிலில் காய்ந்த பூண்டில், வேர் முதலியவைகளிலுள்ள கசப்பு முதலான சுவைகள் விதையை அடைந்துவிடுகின்றன. எனவே, சாஸ்திரத்தில் கூறியுள்ள அளவையே கொடுக்கவேண்டும். அளவு குறைந்தால் வியாதியைப் போக்காது.

**குங்கிலியத்தின் குணம்:**—குங்கிலியத்தில், உப்பு - புளிப்பு நீங்கிய நான்கு சுவைகளும் இருக்கின்றன.

மிருதுபாகலம் - கிரஹபாகலம் - மஹாபாகலம் - பால பாகலம் - குக்குடபாகலம் - ஆகிய ஐந்துவித பாகலங்கள்,

(பாகலம்—பரிணாமசூலம்) வாத ரோகங்கள், உடல் குத்திட்டுப் போவது, கர்ணக நோய், கல்லீரல் வீக்கம், வயிற்று வீக்கம், மூர்ச்சை, கைகால் பிடிப்பு, குன்மம், மண்வீக்கம், வயிற்றுப் புழு, பிஷ்டமேஹம், தலைவலி, மார்வலி, மத்தியத்தாலுண்டாகும் அபாய நிலை, இந்த வியாதிகளுக்குக் குங்கிலியம் கொடுக்கவேண்டும்.

குங்கிலியத்தில் தித்திப்பு இருப்பதால் வாதத்தையும், துவர்ப்பு இருக்கிறபடியால் பித்தத்தையும், கசப்பு இருக்கிறபடியால் சிலேஷ்மத்தையும் போக்கும். உரப்பு இருப்பதால் அக்கினியை தீபனம் செய்யும், நைப்பு இருக்கிறபடியால் பூச்சிகளைக் கொன்று பலத்தையும் கொடுக்கும்.

குங்கிலியத்தை, முதலில் இரண்டு பலம் கொடுக்க வேண்டும். பிறகு தினந்தோறும் இரண்டு பலம் வீதம் கூட்டி, இருபது பலம் வரையில் பத்து நாள்கள் கொடுக்க வேண்டும். அதன் பிறகு, நாள்தோறும் இரண்டு பலம் வீதம் குறைத்துப் பத்து நாட்கள் கொடுக்கவேண்டும். இவ்விதம் குங்கிலியத்தைக் கொடுத்தால் ரோகங்களைப் போக்கி, பலத்தையும் கொடுக்கும்.

குங்கிலியத்துடன் நெய்யைச் சேர்த்து, மந்தாக்கினியில் பாகம் செய்யவேண்டும். அது, திரவமாக ஆனவுடன், ஸூர்யோதயத்திற்கு முன், யானை எழுந்தவுடன், முறையுடன், அதற்குக் குடிக்கக் கொடுக்கவேண்டும்.

குங்கிலியம் - கருசிலாங்கண்ணி - அஞ்சனபத்திரம் - இவைகளை ஸம எடை நல்லெண்ணெ சேர்த்துக் கொடுக்க, இளைத்த யானை பருக்கும். மூத்திரம் கலந்து கொடுக்க, பருத்த யானை இளைக்கும்.

வஸந்த காலத்தில், குங்கிலியத்தை எண்ணெயுடன் கொடுத்து, மத்தியத்தை அநுபானமாகக் கொடுக்கவேண்டும்.

கிரீஷ்ம (வர்ஷா) காலத்தில், நெய்யுடன் கலந்து கொடுத்து, கல்கண்டை அநுபானமாகக் கொடுக்கவேண்டும்.

சரத் காலத்தில், நெய்யுடன் கலந்து கொடுத்து, பாலை அநுபானமாக கொடுக்க வேண்டும்.

ஹேமந்த — சிசிர காலங்களில், கடுகெண்ணெயுடன் கொடுக்க வேண்டும். அதனால், வயிற்றிலுள்ள கல்மஷங்கள் நீங்கி சுத்தமாகும். எல்லா ருதுக்களிலும் கொடுப்பது நல்லது.

எந்த வியாதிக்கு எந்த மருந்து கூறப்பட்டிருக்கிறதோ, அந்த மருந்தைக் குங்கிலியத்துடன் கொடுத்தால், அந்த வியாதி தீரும்.

உத்தம வயதுடைய யானைக்கு 110 பலமும், மத்திம கஜத்திற்கு 82½ பலமும், அதம கஜத்திற்கு 55 பலமும், குங்கிலியத்தைக் கொடுக்க வேண்டும்.

**காலங்களுக்குச் சிறந்த பானங்கள் :—**

வஸந்தகாலத்தில், யானைகளுக்கு, மஜ்ஜையும் ஊந்தண்ணும் சிறந்த பானமாகும்.

ஹேமந்த காலத்திலும் வருஷா காலத்திலும் தைல பானம் சிறந்தது.

சரத் - கிரீஷ்ம காலங்களில் நெய் சிறந்த பானமாகும்.

வருஷா காலத்தில் யானைகள் கொழுத்திருக்கும். அப்பொழுது, எண்ணெ முதலியவைகளைக் கொடுக்கவேண்டும்.

புற்கள் பழுத்தும் காய்ந்துமிருக்கும் ஹேமந்த கிரீஷ்ம காலங்களில், எண்ணெ கொடுக்கலாகாது.

பயிறுகளின் கதிர்கள் பழுத்துள்ள ஹேமந்த காலத்தில், காய்ந்த புற்களாலும் எண்ணெயாலும், கெடுதிகள் உண்டாகும். எண்ணெ ஜீரணமாகாது.

சிசிர ருதுவில், நெய் ஜீரணமாகாது. கிரீஷ்ம காலத்தில், தைலபானத்தால், யானைகள் மூர்ச்சை யடையும். தாகம் - நடுக்கல் - சரும வியாதிகள் உண்டாகும. ஆகையால்,

பனியுள்ள ஹேமந்த சிசிர காலங்களில், யானைகளுக்கு, தைலபானம் கொடுக்கலாகாது.

சயந விதி :—

யானைகளுக்குப் பித்தாசயமானது, தொப்பிளுக்கு மேலே மார்பைப்பற்றி யிருக்கிறது. தொப்பிளுக்குக் கீழே வாதாசய மிருக்கிறது.

யானைகளுக்கு முன்னால் கால்களுக்கள் ஆமாசயமாகும். மார்பு. கண்டம் - தலை - இவைகள், சிலேஷ்மாசயமாகும்.

யானைகளை, கிரீஷ்ம காலத்தில் அன்னம் புஜித்தபிறகு, எட்டரை நாழிகைக்கு மேல் படுக்கவைத்து புற்களால் போர்த்தவேண்டும். தூங்கி எழுந்த பிறகு, அதனிடத்திற்குக் கொண்டுவரவேண்டும்.

வருஷா காலத்தில், இரவு ஆறு நாழிகைக்குப் படுக்க வைத்து, இரவு எட்டு நாழிகை பாக்கியிருக்கும் பொழுது, அதனிடத்திற்குக் கொண்டுவர வேண்டும்.

ஹேமந்த காலத்தில், இரவு எட்டு நாழிகைக்குப் பிறகு படுக்க வைத்து, பத்து நாழிகை பாக்கி இருக்கும்பொழுது, அதனிடத்திற்குக் கொண்டுவர வேண்டும்.

சரத் - வஸந்த - சிசிர - காலங்களில், ஊகித்து உசிதம் போல் செய்ய வேண்டும்.

பக்ஷியபேயாதி பதார்த்த குணதோஷம் முற்றும்.

# வஸ்தி விதி. (Enema.)

-0-

வஸ்திவிதிக்கு, மூங்கில் அல்லது மரத்தினாலே, நீண்டு வட்டமான முகப்பு உள்ள குழாய் செய்ய வேண்டும்.

அக்குழாய், உத்தம கஜத்திற்கு 48-அங்குலமும், மத்திம கஜத்திற்கு 42-அங்குலமும், அதம கஜத்திற்கு 36-அங்குல

மும் இருக்கவேண்டும். உத்தம கஜத்திற்கு, அதன் சுற்றளவு 16 அங்குலம் இருக்கவேண்டும். வஸ்திக்கு, சிறந்த சுற்றளவு உள்ளதே நல்லது. இதன் (நீளம்) அளவு ஒவ்வாவிட்டால், வாலின் அளவைக் கொள்ளவேண்டும்.

வஸ்திக்குழாயின் அடிப்பாகத்தில், 12 அங்குலம், துதிக்கை விரலைப்போலக் கர்ணிகை வைக்கவேண்டும். அக்கர்ணிகை முழுமையும் யானையின் குதத்துவாரத்தில் சொருகிவிட வேண்டும்.

வஸ்திக்குழாயின் நேத்திரத்தில் (வரம்பு) நுருத்தியை நன்ருகக் கட்டிவிட்டுப் பிசைந்துவிட வேண்டும்.

வஸ்திக்குழாயின் துவாரமானது. உத்தம கஜத்திற்குப் பெரிய நெல்லிக்கனியளவும், மத்திம கஜத்திற்கு நடுத்தர நெல்லிக்கனியளவும், அதம கஜத்திற்கு சிறிய நெல்லிக் கனியளவும் இருக்க வேண்டும்.

இந்த அளவே, அநுவாஸநத்திற்கும் பொருந்தும் (அநுவாஸனம் - தைலவஸ்தி.)

வஸ்திக்கு, யானையை நிறுத்துமிடமானது, முன்பக்கம் தணிவாகவும், பின்பக்கம் தூக்கலாகவும், இரு புறங்களும் (யானையின் கால் மட்டத்திற்குமேல் உயர்ந்து) ஸமதளமாகவும், யானையின் அகல நீளத்திற்கு ஏற்றதாயும், சுபகரமான மரங் களால் அமைக்கப்பட்டிருக்க வேண்டும்.

யானையிடம் நன்கு பழகியவர்கள், யானைக்கு முன்புறத் திலும் இரு பக்கங்களிலும் நின்றுகொண்டு, அதில் யானையை ஸுகமாக நிற்கும்படி செய்யவேண்டும்.

சிறந்த வைத்தியர்கள், தக்க உதவியுடன், யானையைத் தடவிக்கொடுத்து விசுவாஸத்தை யுண்டுபண்ணி, வஸ்தி கொடுப்பதைப் பொருக்கும்படி செய்ய வேண்டும். அதை உபாயங்களால் பழக்கி, பிறகு மருந்தை செலுத்த வேண்டும்.

கை நகங்களைக் களைந்து சுத்தம் செய்துகொண்டு. கைகளை நெய்யில் நனைத்துக் கொண்டு, யானையின் கடையிலும் நெய்யைத் தடவி, வெளியேவரும் மலத்தை, வலக்கையால் எடுக்க வேண்டும்.

அப்பொழுது, யானைக்கு. மெதுவாக கையால் பயத்தைக் காட்டியும், ஸமாதானம் செய்தும், வீணை - புல்லாங்குழல் - தாளம் - கீதம் - முதலியவைகளால், அதன் மனதுக்கு ஸமாதானத்தை யுண்டுபண்ண வேண்டும்.

ஸஹஜமாகக் கொடுக்கும் ஆஹாரத்தில் அரைப்பங்கு ஆஹாரத்தையே கொடுக்க வேண்டும்.

**கஷாய வஸ்தி :—**

கஷாயவஸ்திக்கு, எண்ணெயின் அளவைப்போல இரு மடங்கு கஷாயமிருப்பது சிலாக்கியமாகும். கஷாயவஸ்தி கொடுத்தால், யானையை ஒரே இடத்தில் தேக்கி வைக்க வேண்டியதில்லை. யானை ஆஹாரம் செய்தபிறகு, வஸ்தியை செய்யலாகாது. இரண்டுமுறை மூன்றுமுறை கொடுக்கலாம். அது தோஷங்களையும் மலத்தையும் வெளிப்படுத்தும். அத்துடன் வஸ்தியை நிறுத்திவிட வேண்டும். இதற்கு “நிரூஹவஸ்தி” என்றும் பெயருண்டு.

கடுமையான பதார்த்தம், உஷ்ணமான பதார்த்தம், எண்ணெ, உப்பு, இவைகள் சேர்ந்ததே வஸ்தியாகும்.

முதலில், உப்புக் கலந்த எண்ணெயைக் கொடுக்க வேண்டும். மத்தியில், தீக்ஷ்ண பதார்த்தத்தைக் கொடுக்க வேண்டும். கடைசியில், மதுர பதார்த்தத்தைக் கொடுக்க வேண்டும்.

எண்ணெயால் நெகிழ்ச்சியுண்டாகும். தீக்ஷ்ண பதார்த்தத்தால் தோஷங்கள் நீங்கும். மதுர பதார்த்தத்தால் தெளிவு உண்டாகும்.

சிலர் தைலவஸ்தியை முதலில் கொடுக்க வேண்டுமென்றும், மற்றும் சிலர் கஷாயவஸ்தியை முதலில் கொடுக்க வேண்டுமென்றும் கூறுகின்றனர்.

கஷாயத்தால் மலம் கழிந்து, குதம் சுத்தமாக இருக்கும் பொழுது, தைலவஸ்தியைக் கொடுப்பதே சிறந்ததாகும். குத துவாரத்தை மலம் அடைத்துக் கொண்டிருக்கும்பொழுது, தைலவஸ்தியைக் கொடுத்தால் நல்ல பலன் ஏற்படாது. சாம்பலில் செய்த ஆஹுதியைப்போல பயனற்றதாகும்.

வஸ்திக்கு, மிருகங்களின் மூத்திரம் - தைலம் - மாமிசம் - ரஸம் - தயிர் - இலந்தைப் புளி - பால் - தானியநீர் - கடுக்காய் ஜலம் - பழங்கள் - உப்பு - இவைகளை ஸம பாகமாகச் சேர்க்க வேண்டும்.

மேதாவிகள், வியாதிகளை குணப்படுத்துவதற்கு வஸ்தி விதியைக் கூறியுள்ளனர். வஸ்தியானது, வியாதியையும் தோஷங்களையும் போக்கும்.

இலைகள் உதிர்ந்து குருத்துகளற்ற கிழட்டு மரமானது, காலத்தில் விடும் ஜலத்தினலே, குருத்துகள் விட்டு, பசும் இலைகளும் புஷ்பங்களும் பழங்களும் உள்ளவைகளாக ஆவது போல, வஸ்திவிதியால், யானை செழித்து வளரும். அவைகளின் பின்னுடல், இடுப்பு, முதுகெலும்பு, இவைகள் வலிவு உள்ளவைகளாக ஆகும். ஜாடராக்கினி விருத்தியடையும். வாயுவும் சரியாகப் பரியும்.

இதில் நல்ல பயிற்சியும், ஆபத்துகாலத்திலும் கலங்காத மனமுடையவனுமான சிறந்த வைத்தியனையே, கஜங்களுக்கு வைத்தியனாக வைத்துக்கொள்ளல் வேண்டும்.

கஜ வஸ்தி விதி முற்றும்.



# கஜ நஸ்ஸிய விதி.

— o —

யானைகளுக்கு, தலை - காது - உடல் - முகம் - கண் - இவைகளிலுண்டாகும் வியாதிகள், கர்ணகம் என்னும் வியாதி, பிடரிப் பிடிப்பு, கழுத்துப் பிடிப்பு, இவைகளுக்கு நஸ்ஸியம் சிறந்ததாகும். முற்பகலில், யானை ஆஹாரம் செய்யுமுன் நஸ்ஸியம் கொடுக்கவேண்டும்.

அரை துரோணம் எண்ணெயில், வியாதிஹரமான ஔஷதங்களைச் சேர்த்து, மந்தாக்கினியின் பாகம் செய்து, மருந்தை தயாரித்து வைத்துக்கொள்ள வேண்டும்.

மாவுத்தன், யானையின் இடுப்பில் உட்கார்ந்துகொண்டு, யானையைத் தலையை உயரத் தூக்கிக்கொண்டுத் துதிக்கையை நீட்டும்படி செய்து, அதை ஸமாதானமும் செய்யவேண்டும். அப்பொழுது ஸமர்த்தனை வைத்தியன், 12 அங்குலம் சுற்றளவும், 16 அங்குலம் நீளமும், மூக்குத் துவாரத்திற்குப் பொருத்தமான துவாரமுமுள்ள வஸ்தியை, மூக்கில் வைத்து அமுக்கிப் பிடிக்கவேண்டும் இதை நூறு நிமிஷகாலம் அமுக்கிப் பிடிக்கவேண்டும். இவ்விதம், 4, 5, தடவை செய்ய வேண்டும். இவ்விதம் ஒரு மாதகாலம் செய்யவேண்டும். அல்லது, போதுமான காலம் வரையில் செய்யவேண்டும். நஸ்ஸியம் கொடுத்த பிறகு, துதிக்கையை வெந்நீர்விட்டு நன்கு துடைத்துவிட வேண்டும்.

பிறகு, முக்கால் பங்கு ஆஹாரத்தில் பால் - அல்லது ரஸ பாதர்த்தம் - அல்லது நெய் கலந்து, சுவையுடன் அருந்தும்படி, கொடுக்கவேண்டும். அதன் பிறகு புற்களால் திருப்தியடையச் செய்து, நல்ல தண்ணீரை அநுபானமாகக் கொடுக்கவேண்டும்.

எண்ணெயானது பாகத்தால் எட்டில் ஒரு பாகம் ரஸமாக மாறி, யானைக்கு பலத்தைக் கொடுக்கின்றது. அக்கினி பலத்தையும் கொடுக்கின்றது. கழுத்து - மார்பு - விளாப்புறம்- கன்னம் - பிடரி - கண் - நிறம் - மனது - இவைகளில் தெளிவையும் உண்டுபண்ணுகிறது.

கஜ நஸ்ஸிய விதி முற்றும்.



# போதாதி பேஷஜ விதி.

—o—

யானைக் குட்டிகளுக்கு ஐந்து வயது வரையில் அஜீரணம் ஏற்படாமலிருக்க, அஜமதம் - வசம்பு - திரிகடுகம் - இவைகளைத் தூள் செய்து, தேனில் குழைத்துக் கொடுக்க வேண்டும்.

பத்து வயது வரையில், திரிகடுகம் - கோஷ்டம் - யானைத் திப்பிலி - இந்துப்பு - கடுக்காய் - இவைகளைத் தூள் செய்து (தேனில்) கொடுக்கவேண்டும்.

இருபது வயதுவரையில், பூண்டு - மஞ்சள் - சுக்கு - மிளகு- திப்பிலி - யானைத் திப்பிலி - காயம் - இவைகளைத் தூள் செய்து, நெய்யில் கொடுக்கவேண்டும்.

முப்பது வயது வரையில், திரிகடுகம் - திரிபலம் - வசம்பு- கோஷ்டம் - மூக்கரட்டை - இந்துப்பு - காயம் - நிலப்பனைக் கிழங்கு - இவைகளைக் கொடுக்கவேண்டும்.

நாற்பது வயது வரையில், திரிகடுகம் - மஞ்சள் - மரமஞ்சள் - கோஷ்டம் - அஜமதம் - கருஞ்சிவதை - இருபுங்கை - உள்ளி - வசம்பு - காயம் - கடுகு - வேப்பம்விதை - கொடிவேலி - சோத்துப்பு - கிராம்பு - ................? மாதுளை - இவைகளைத் தூள் செய்து எண்ணெயில் கலந்து, எழுந்தவுடன் கொடுக்கவேண்டும்.

ஐம்பது வயது வரையில், திருபலே - யவச்சாரம் - கடுகு ரோகிணீ - கொடிவேலி - துளஸி - முறுங்கை - இருமஞ்சள் - திப்பிலி - பஞ்சலவணம் - அவிரி - சாரணை - சுக்கு - மிளகு - மருள் - காயம் - ஜீரகம் - கருஞ்ஜீரகம் - இவைகளைத் தூள் செய்து, எண்ணெயுடன் பிசைந்து கொடுக்கவேண்டும். மிகக் கிழட்டு யானைக்கு, உருபூக (பெரிய கொட்டைப்பாக்கு) தைலத்தில் கலந்து கொடுக்கவேண்டும்.

அஜமதம் - வசம்பு - பூண்டு - கடுகு - முறுங்கை - திரி பலம் - கடுகு ரோஹிணீ - திரிகடுகம் - இவைகளைத் தூள் செய்து, தைலத்தில் கலந்து கொடுக்க, ரோகங்கள் தீரும்.

வயிற்றில் பூச்சியினுல் இளைத்த யானைகளுக்கு, திரிகடுகம்-முள்ளுக்கத்தரி - வசம்பு - கோரைக்கிழங்கு - பில்வம் - வாயு விடங்கம் - கடுக்காய் - அதிவிடயம் - இவைகளைத் தூள் செய்து எண்ணெயில் கலந்து, எழுந்தவுடன் கொடுக்கவேண்டும்.

காலம், உடல் நிலை, வியாதி, வலிமை, இவைகளை அறிந்துகொண்டு, தக்க முறையில், மருந்துகளை கபளமாகக் கொடுக்கவேண்டும்.

இருபது பலம் கொண்டது ஒரு கபளமாகும். உத்தம கஜத்திற்கு மூன்று கபளங்களும், மத்திம கஜத்திற்கு இரண்டு கபளங்களும், அதம கஜத்திற்கு ஒரு கபளமும் கொடுக்க வேண்டும்.

பெருங்காயம் - ஜீரகம் - கருஞ்ஜீரகம் - திரிகடுகம் - கடுகு - கொடிவேலி - முருங்கை - முள்ளுக்கத்தரி - சாரணை - இவைகளைக் கொடுக்க, அக்கினி தீபனமாம். வயிறு சுத்தமாகும்.

முறுங்கை - கத்தரிக்காய் - திரிபலம் - கோஷ்டம் - சவ்வியம் - முள்ளுக்கத்தரி - திரிகடுகம் - ஜீரகம் - பூண்டு - இவைகளை எண்ணெயில் கலந்து கொடுக்க, அக்கினி விருத்தியும் ஸத்துவ பலமும் உண்டாகும்,

ஏலக்காய் - வசம்பு - இந்துப்பு - சுக்கு - கடுகு - காயம் - மிளகு - கிராம்பு - இவைகளை எண்ணெயில் கலந்து எழுந்த வுடன் கபளமாகக் கொடுக்க, "கபவாதம்" தீரும்.

ஏழிலைப்பாலை - சிற்றேலம் - சீந்தில் - வேம்பு - இவைகளை யானை மூத்திரத்தில் ஊரவைத்துத் தூள் செய்து, கபளமாகக் கொடுக்க, "அக்கினி தீபன"மாம்.

ஆல் - கொட்டைக்கரந்தை - உள்ளி - தாளிசப்பத்திரி - சதகுப்பை - வாயுவிடங்கம் - பேச்சுரை - புங்கை - முள்ளங்கி - பெருமரம் - பெருபுங்கை - முள்ளுக்கத்தரி - இவைகளைத் தூள் செய்து, கபளமாகச் செய்து, மூத்திரத்தில் நனைத்துக் கொடுக்க, "அக்கினி தீபன"மாம்.

கொட்டை - புங்கை – நொச்சில் – எருக்கு – இவைகளை யானை மூத்திரத்தில் பிசைந்து, எழுந்தவுடன் கொடுக்க வேண்டும். (தீபனமாம்)

கொட்டை - முன்னை - துவரை - ஸோமவல்லி அல்லது முள்ளங்கி - வெள்ளைக்குன்றி - ஜலத்தில் முளைத்த வெள்ளைக் குன்றி - இவைகளின் தோலிகளை அமுக்கிராக்கிழங்கு சேர்த்து கபளமாகக் கொடுக்க, "அக்கினி மாந்தியம்" தீரும். புல்லைத்தின்னும்.

இரு கண்டங்கத்தரி – வெண்முறுங்கை. முள்ளங்கி நந்தியாமிரம் அல்லது திருகுகள்ளி - காட்டாத்திப்பூ கடுக்காய்த்தோல் – யானை வணங்கி - கொட்டை – திரிகடுகம் இவைகளைத் தூள் செய்துத் தேன் கலந்து கொடுக்க, மலம் கட்டும்.

இரு மஞ்சள் - காயம் - வாயுவிடங்கம் - உள்ளி - வசம்பு வாலுழுவை - திரிகடுகம் - கிராம்பு - தேவதாரு - மஞ்சிட்டை கொடிவேலி - இவைகளைத் தூள் செய்து, தேன் அல்லது கோமூத்திரம் கலந்து கபளமாகக் கொடுக்க "ஆநாஹங்கள்" (மலஜலபந்தம்) தீரும். பூச்சிகளைக் கொல்லும். பசி யுண் டாகும்.

வசம்பு – திரிகடுகம் மஞ்சள் – காயம் – மஞ்சிட்டை கிராம்பு - வாயுவிடங்கம் - உள்ளி இவைகளைத் தூள் செய்து கோமூத்திரம் கலந்து கபளமாகக் கொடுக்க, "ஆநாஹம், சூலம், வாதம்" இவைகள் தீரும். பூச்சிகள் நசிக்கும். மண்ணைத்தின்ன விரும்பாது.

வசம்பு - பூண்டு - இரண்டையும் தேனுடன் மர்த்தித்துக் கொடுக்க, வயிற்றுப் பூச்சிகள் நசிக்கும்.

பூனைக்காலி - மஞ்சள் முள்ளங்கி - சிறு முன்னை - காட்டு மல்லி - புங்கை - கொடிவேலி - இவைகளை கபளமாகக்கொடுக்க அக்கினி தீபனமாம். பிறகு, முன்பகலில் வெளியே சென்று வந்தவுடன் கொட்டை – புங்கை – வேம்பு – இவைகளை ஸமபாகம் சேர்த்துக் கபளமாகக் கொடுக்க, ரோகங்கள் நசிக்கும்.

அரவாத்திப்பச்சை - சீந்தில் - நாயுருவி - புங்கை - முன்னை நிலவேம்பு - ஆடாதொடை இவைகளைக் காலத்தில் கொடுக்க, "ரோகங்கள்" நசிக்கும். புஷ்டியுண்டாகும். மனம் தெளிவடையும்.

பெறுங்கிளா - நொச்சில் - விளா - புங்கை இவைகளைத் தூள்செய்து எழுந்தவுடன் கொடுக்க, "தீபந"மாம்.

முறுங்கை – கத்தரி – வேம்பு – மாவலிங்கை – சீந்தில் பில்வம் இவைகளின் வேரைச் சூரணம் செய்து, படுக்குமுன். மூத்திரம் கலந்து கொடுக்க "தீபந"மாம்.

ஏரழிஞ்சில் - புங்கை - கத்தரி - மலைமல்லிகை - பெருமரத் தோலி இவைகளைத் தூள் செய்து, எழுந்தவுடன் மூத்திரத்தில் கொடுக்க "தீபந"மாம்.

சாரணைவேர் - பூனைக்காலி - வேம்பு - வசம்பு - இவைகளை எழுந்தவுடன் கொடுக்க, "தீபந"மாம்.

வேம்பு - நன்னாரி - பெருநொச்சில் - நொச்சில் - புங்கை - எருக்கம் வேர் - இவைகளைப் படுக்கைக்குமுன் கொடுக்க, "தீபந"மாகும்.

முருங்கை சீந்தில் - மாவலிங்கை - கத்தரி கண்டங் கத்தரி - பில்வம் இவைகளை மூத்திரத்தில் நனைத்து இடித்து எழுந்தவுடன் கொடுக்க, " தீபந " மாம்.

கொட்டைவேர் - கடுக்காய் - மஞ்சள் கொத்து - சாரணை - அருகு - இவைகளை எண்ணையில் நினைத்து எழுந்தவுடன் கொடுக்க, " தீபந "மாகும். வாதத்தைக் கண்டிக்கும்.

கொட்டைவேரையும் நொச்சில்வேரையும் இடித்து மூத்திரத்தில் நனைத்து எழுந்தவுடன் கொடுக்க, " தீபந " மாகும்.

சிறு பூனைக்காலி - யானை வணங்கி வெள்ளெருக்கு கொடிவேலி - சாமை - அமுக்கரா - தேள்கடை இவைகளின் வேர், வசம்பு இவைகளை தூள் செய்து, எழுந்தவுடன் கொடுக்க " தீபந "மாம். சிலேஷ்மத்தையும் கண்டிக்கும்.

ரோகங்களின்றி நல்லஸ்திதியிலுள்ள யானைகளுக்கு, இந்த தீபந ஔஷதங்களை, காலமறிந்து, முறையுடன் கொடுக்கவேண்டும்.

வசம்பு - கிராம்பு - திரிகடுகம் - காயம் - வாலுழுவை - உள்ளி - யவச்சாரம் - வாயுவிடங்கம் - கடுகு - கொடிவேலி - முள்ளங்கி - தாமரைக் கிழங்கு - இவைகளைத் தூள் செய்து, தேன், அல்லது கோமூத்திரம், அல்லது நல்லெண்ணை கலந்து எழுந்தவுடன் கொடுக்க, ஸகல தோஷங்களும் தீரும். தீபநமுண்டாகும். பூச்சிகள் அழியும்,

வேம்பு - பேப்புடல் - துளஸி - நொச்சில் - இவைகளை, தண்ணீர் குடிப்பதற்கு முன் கொடுக்கவேண்டும்.

புங்கை - மாவலிங்கை - பெருபுங்கை - பில்வம் - கொட்டை இவைகளை, ஜலம் குடித்த பிறகு கொடுக்க வேண்டும்.

மலையருகு - கோழியாவாரை - நன்னாரி - கண்டங்கத்தரி - முள்ளங்கி - கொட்டை - தீபந ஔஷதம் - இவைகளை ஆஹாரத்திற்கு முன்பு கொடுக்க வேண்டும்.

சீந்தில் - கொடிவேலி - வேம்பு - புங்கை - பெருபுங்கை - நன்னாரி - முருங்கை - கத்தரி - கண்டங்கத்தரி - பேயத்தி - தூதுவளை - தானியங்கள் - இவைகளை, ஆஹாரம் செய்த பிறகு கொடுக்கவேண்டும்.

நொச்சில் - உகாய் - வாலுழுவை - வேம்பு - கொட்டை - புங்கை — அழிஞ்சில் — பூண்டு — முன்னை — இவைகளை, தூக்கத்தில் கொடுக்கவேண்டும்.

முப்பது பலம் கொண்டது உத்தம கபளமாகும். 25 பலம் கொண்டது மத்திம கபளமாகும். 20 பலம் கொண்டது. அதம கபளமாகும்.

வியாதிஹரமான மருந்து, 20 பலம் கொண்டது ஒரு கபளமாகும். இதை ஒரே காலத்திலோ, பகிர்ந்தோ, உசிதம் போல் கொடுக்கவேண்டும்.

நல்ல நிலையிலுள்ள யானைக்கு, 10 பலம் மருந்தை பகிர்ந்து, ஆறு காலங்களில் கொடுக்கவேண்டும். அது புஷ்டியையும், ஆரோக்கியத்தையும் கொடுக்கும்.

வரட்சியுள்ள யானைக்கு, முதலில் எண்ணையைத் தேய்த்துப் பிறகு மருந்தைக் கொடுக்கவேண்டும்.

வியாதியுற்ற யானைக்கு, அதன் துவக்கத்தில், அதன் தன்மையை அறிந்து கொண்டு, பிறகு முறைப்படி மருந்து கொடுக்கவேண்டும்.

உத்தம வயதும் ஸமாக்கினியுமுள்ள யானைக்கு, 36 பலம் மருந்தை, ஆறு பாகமாகச் செய்து, ஆறு காலங்களில் கொடுக்கவேண்டும்.

விஷமாக்கினியும் வியாதியுமுள்ள யானைக்கு, வியாதியின் நிலைமை - அதன் பலாபலம் - இவைகளை நன்கு அறிந்து கொண்டு, மருந்தைக் குறைத்துக் கொடுக்கவேண்டும்.

தீக்ஷ்ணாக்கினியுள்ள கஜத்திற்கும், பாலவிருத்த கஜங் களுக்கும், தீபந ஔஷதத்தைக் குறைத்துக் கொடுக்க வேண்டும்.

உத்தம வயதின் மத்திம பாகத்திலுள்ள யானைக்கு, 30 பலமும், மத்திம வயதின் அதம பாகத்திலுள்ள யானைக்கு, 20 பலமும், அதம வயதின் மத்திம பாகத்திலுள்ள யானைக்கு, 15 பலமும். அதம வயதின் அதம பாகத்திலுள்ள யானைக்கு, 5 பலமும், தீபந ஔஷதம் கொடுக்கவேண்டுமென்று கூறப் பட்டிருக்கிறது,

யானைகளுக்கு பத்து வயது வரையில் பாலியமாகும். இருபது வயது வரையில் மத்திப வயதாகும். இருபதுக்கு மேல் எழுபது வயது வரையில். உத்தம வயதாகும். அதற்குப் பிறகு கிழத்தனமாகும், என்று முனிவர்கள் கூறுகின்றனர்கள்.

போதாதி பேஷஜ விதி முற்றும்.



# கஜ சாலா நிர்மாண விதி.

—— o ——

**க**ஜ சாலையானது, ராஜதானிக்குக் கிழக்கு அல்லது வட திசையில், ஸகல ருதுக்களிலும் ஸுககரமாகவும், மரங் களும் ஜலாசயங்களும் நிறைந்ததாகவும், வெளுப்பு - சிகப்பு- மஞ்சள் - வெண்கரிசல் நிறமாகவும், புற்றுகள், உவர்மண் இல்லாத களிப்பு நிலமாகவும், தேவாலயம் - பாழுங்கோவில்- பூதாவாஸம் - நன்காடு - இவைகளுக்கு சிறிது தூரம் விலகியு முள்ள மங்களகரமான இடத்தில் அமைந்திருக்க வேண்டும்.

அத்தகைய கஜ சாலையைக் கட்டுவதற்கு, விசுவேசுவரனை பூஜை செய்து, ஹோமம் செய்து, அந்தணரைத் திருப்தி செய்து, புண்ணியாஹ கோஷத்துடன், கஜ சாலையை அளக்க வேண்டும்.

உத்தம கஜத்திற்கு 24 முழம் நீளமும், மத்திம கஜத் திற்கு 22 முழம் நீளமும், அதம கஜத்திற்கு 20 முழம்

நீளமும், கஜசாலை இருக்கவேண்டும். நீளத்தில் பாதி அகலமும், 12, 10, 8, முழம் உயரமும் இருக்க வேண்டும். நீளத்தில் பாதி முகப்பும் வழியும் வைக்கவேண்டும்.

கஜசாலை கிழக்கு முகமானால் அதன் தென் பகுதியிலும், வடக்கு முகமானால் அதன் மேல் பகுதியிலும், வழி இருக்க வேண்டும்.

அதன் பின்புறத்தில், லத்தி முதலியவைகளை எடுத்துச் சுத்தம் செய்வதற்காக, தனித்து ஓர் வழி வைக்கவேண்டும்.

கோணல் - கரடு முரடு - முடிச்சு - போரைகளில்லாமல் உறுதியுள்ள, தேக்கு - மருது - சாகம் - திமிசு ஆகிய மரங்களில், மூன்று முளைகளை வட்டமாகச் சதுக்கி, அச்சாலையின் நீள அளவின் மத்திய பாகத்தில் நடவேண்டும்.

அந்த ஸ்தம்பங்கள், உத்தம கஜத்திற்கு 14 முழம் நீளம்; 68 அங்குலம் சுத்தளவும், மத்திம கஜத்திற்கு 13 முழம் நீளம் 56 அங்குலம் சுத்தளவும், அதம கஜத்திற்கு 12 முழம் நீளம் 48 அங்குலம் சுத்தளவும் இருக்கவேண்டும்.

அம்முளைகளை, கிழக்கு முகமான சாலையில் மேற்குப் புறத்திலும், வடக்கு முகமான சாலையில் தெற்குப்புறத்திலும், (சுவற்றோரத்தில்) 16 அங்குலம் ஒதுக்கிவிட்டுவிட்டு, நான்கு முழம் பூமிக்குள் நடவேண்டும்.

அச்சாலையின், பின்பக்கத்தில், நடுவில், யானையின் படுக்குமிடம் அமைக்கவேண்டும். அது, நடுவில் சிறிது பள்ளமாகவும் இருபக்கங்களும் சிறிது கரைவாக உயர்ந்தும் இருக்க வேண்டும்.

அதில், உலர்ந்து மிருதுவான லத்திகளைப் பரப்பி, படுப்பதற்கு ஸுகமாக இருக்கும்படி செய்யவேண்டும். யானைகளின் அளவுக்கு ஏற்றதாகவும் இருக்கவேண்டும். இதுவே, பெண் யானைக்கும் பொருந்தும்.

படுக்கையில் லத்தியைப் பரப்புவதனால், கிரக தோஷங்கள் நீங்கும். தாபமும் தணியும்.

படுக்குமிடத்தைச் சுற்றிலும் அரைச் சுவரெடுத்து மண்ணால் பூசவேண்டும். அது மறைவாகவும், அழுத்தமான இலைகளால் மூடப்பட்டும் இருக்கவேண்டும்.

சுபகரமான தினத்தில், பகலில் பலி - ஹோமம் - பிராமஹணஸந்தர்பணங்கள் செய்து, கஜத்தை சாலைக்கு அழைத்துச் செல்லவேண்டும்.

உத்திரம் - உத்திராடம் - உத்திரட்டாதி - ரோஹிணி - ஹஸ்தம் - திருவோணம் - இந்த நக்ஷத்திரங்களும், தசமி - ஏகாதசி - திதிகளும் சாலாப்பிரவேசத்திற்கு சிறந்த நாள் களாம்.

கஜசாலையில், சுக்திபாணியையும் சாஸ்தாவையும் பூஜித்து வரவேண்டும். அப்படிச் செய்யாவிட்டால், பாகலாதி வியாதி களால் யானைகள் அழியும். விருத்திக்கு வராது. ஆகையால், கஜசாலையில் தினந்தோறும் ஸ்கந்தரையும் சாஸ்தாவையும் தவராமல் பூஜித்து வரவேண்டும்.

யக்ஷ - கந்தர்வ - ராக்ஷஸர்களின் திருப்திக்காக, ஒவ் வொரு கஜசாலையிலும், ஆடு - கோழி - பன்றி - இவைகளை பலிகொடுக்க வேண்டும்.

மற்றொரு நூலில், ராஜக்கிரஹத்திற்குத் தென் பக்கத்தில் கஜசாலை நிர்மாணம் செய்ய வேண்டுமென்று கூறப்பட் டிருக்கிறது.

கஜசாலை கட்டுவதற்கு முன்பே, அந்த பூமியை நன்கு சோதித்து, உமி - கரி - எலும்பு - மயிர் - கருங்கல் - மண்டை யோடு - இவைகளில்லாமல், பூமியை நன்றாக சுத்தம் செய்து, கஜசாலையைக் கட்டவேண்டும்.

கஜசாலைக்கு, தேக்கு - மருது - அஞ்சனம் - அரசு - திமிசு - ஸியந்தநம் - முதலிய மரங்கள், சிறந்தவைகளாகக் கூறப்பட் டிருக்கின்றன.

படுக்குமிடமானது, கஜசாலைக்குக் கீழ்பக்கத்திலாவது, வட பக்கத்திலாவது இருக்கவேண்டுமென்று கூறப்படுகிறது.

கஜசாலையானது, 7 முழம் அகலம் உள்ளது உத்தமமானதாம். 6 முழம் அகலமுள்ளது மத்திமமானதாம். 5 முழம் அகலமுள்ளது அதமமாகும்.

யானை உல்லாஸமாக இருப்பதற்காக சுற்றிலும் தழைகளால் இடுக்குகளில்லாமல் மறைக்கவேண்டும்.

கொசுக்கள் முதலியவைகளில்லாமலிருப்பதற்காக, எப்பொழுதும் புகை போடவேண்டும்.

கோடை காலத்தில் மறைவுகள் இருக்கலாகாது. அடிக்கடி தண்ணீர் தெளிக்க வேண்டும்.

கஜசாலையின் பக்கத்தில் அழுத்தமான சுவருகளுடன் கூடிய ஔஷதசாலையை அமைக்கவேண்டும்.

அதற்கு சிறிது தூரத்தில் ரோகசாலை இருக்கவேண்டும். மதம் பிடித்த யானைகளுக்குத் தனித்தனியே கட்டிடங்களும் இருக்கவேண்டும். அவைகளைக் கட்டிப்போடுவதற்கு அழுத்தமான ஸ்தம்பங்களும் இருக்கவேண்டும்.

கஜசாலா நிர்மாண விதி முற்றும்.

பாலகாப்பியம் மஹாபாடம்

விருத்தோபதேசீயத்திலிருந்து

எடுக்கப்பட்ட விசேஷங்கள்

முற்றும்.

:0:

# A SUMMARY OF GAJAŚĀSTRA



## INTRODUCTORY



GUNAVATI, a Yaksha damsel,[1] was changed into an elephant as a result of a curse from sage Matanga, and she gave birth to the sage Pālakāpya.

Pālakāpya, by the grace of Brahma, had become well-versed in medical science even at his birth. He lived among elephants for a considerable number of years and became well acquainted with their habits. As a result, he became the author of GAJAŚĀSTRA which he related to Rōmapāda, King of Anga. This is the work published in this book.

This illustrated work on elephants is mainly based on Palakāpya's work with additional information from other works. Sages like Vyāsa and Vaiśampāyana have also written treatises on elephants.

1. A demi-goddess living in Kubera's kingdom near Kailas.

# GAJASASTRA

In days of yore, a king, Romapada by name, ruled over the country of Anga. This king, hearing that elephants were creating havoc in agricultural farms enchained them with the help of sages like Gautama.

Palakapya was grief-stricken on seeing the enchained elephants. He met the king and explained to him his connection with elephants and his intimate knowledge of elephant-lore. He exhorted the king to extend his protection to elephants. The king was greatly impressed with the Sage and requested him to tell him all about elephants. What the Sage told the king is published in these pages together with extracts from the treatises of Vyasa and Vaisampayana

The opening chapter of this work describes the visit of sages like Gautama, to whom king Romapada complains about the destruction caused by the elephants, the punishment meted out to the elephants, the arrival of sage Palakapya and the initiation of the king in elephant-lore by the sage Palakapya.

The second chapter traces the origin of elephants to the eight "Diggajas" (Elephants presiding over the eight different directions) and the multiplication of their species.

The third chapter contains a description of the destructive activities of elephants which led to the curses by Brahma and other Devas and sages like Gautama and Dirghatapas, as a result of which they lost their wings as well as their celestial powers. They become shortlived and oblivious of their real strength.

The fourth chapter describes in detail the characteristics of elephants living in forests situated in eight different directions with Himalayas as the centre.

The fifth chapter deals with the general characteristics of elephants, their qualities, their habits and their diet and the way to determine their age.

The sixth chapter compares and contrasts the qualities of elephants living in different countries and also gives in detail the several methods of trapping elephants, technically called 'Bandhas'.

In the seventh chapter we are told about the different categories of elephants both of pure and mixed breed.

The eighth chapter gives a description of the elephants with divine characteristics, elephants fit for military purposes, their colours, their features and the good and bad omens indicated by their noises.

The ninth chapter describes the different gaits of the elephants, their good and bad signs and their effects, their deformities, their height, length and bulk.

The tenth and the last chapter describes in detail different styles of riding elephants, the occasion for using the goad, the different methods of controlling them with the feet and the like. The secret language for communicating with them is also indicated. The season for sawing and pruning tusks, the safe limits for cutting them and the distinguishing colour and odour by which their quality can be judged at the time of the operation are all given in great detail.



# கஜ சாஸ்திரத்தின் சுத்த அசுத்த பாடம்

| பக்கம் | வரி | சுத்த பாடம் | அசுத்த பாடம் |
|---|---|---|---|
| 24 | 4 | யுமுடைய | யுடைய |
| 24 | 7 | என்றும் | என்று |
| 54 | 16 | பாச்சாத்ய | பாஸ்சாத்ய |
| 71 | 20 | பிடிக்க | முடிக்க |
| 90 | 20 | ண்டதையும் | ண்டத்தை |
| 96 | 18 | பாயஸம் | பாஸம் |
| 108 | 24 | என்றும் | இவைகளுக்கு |
| 108 | 24 | என்றும் | என்று |
| 116 | 20 | பயனுள்ள | யனுள்ள |
| 125 | 16 | தைலத்தின் சிறந்த | இந்த |
| 129 | 24 | வசம்பு - ஸ்தாபநி | வசம்பு |
| 129 | 25 | கிராம்பு - அஹதண்டம் | கிராம்பு... .... ...... |
| 137 | 12 | சக்தி | சுக்தி |



## ॥ गजशास्त्रे शुद्धाशुद्धपाठः ॥

| पुट-संख्या | श्लोक-संख्या | शुद्धपाठः | अशुद्धपाठः |
|---|---|---|---|
| 2 | 2 | चतुस्सा | चतुस्स्सा |
| 3 | 11 | स्तेभ्यो | न्तेभ्यो |
| 7 | 43 | पृच्छ्य | पृच्छ |
| 8 | 50 | उच्छ्रया | उच्छ्रया |
| 13 | 93 | विदितं | विहितं |
| 18 | 22 | असृजत् | असृजन् |
| 18 | 23 | घर्ष | घर्षा |
| 27 | 11 | हवि | भवि |
| 27 | 14 | धर्ष | घर्ष |
| 27 | 15 | ब्रह्म | ब्रह्य |
| 29 | 23 | न्गजान् | न्गाजन् |
| 36 | 17 | निर्देशो | निर्देशों |
| 41 | 14 | सुख | मुख |
| 56 | 2 | जाताः | जातः |
| 57 | 6 | बाहुक | बाहुक |
| 63 | 3 | प्रचारा | प्रचार |
| 64 | 7 | भद्र | मद्र |
| 74 | 62 | मृगादि | मृगदि |
| 74 | 63 | दन्ताक्षि | दन्तक्षि |
| 82 | 30 | योग्य | योक्ष |
| 83 | 39 | ग्रन्थान्तरे | ग्रन्थन्वरे |
| 101 | 32 | वैशंपायनी | वैशंपायये |
| 116 | 61 | घाताः | घाता |
| 121 | 98 | द्वेषी | हेषी |
| 126 | 31 | घोषणं | घोषेणं |
| 127 | 140 | धमामपि | धमामापि |
| 130 | 6 | वारणः | वारणाः |
| 136 | 6 | मत्कुणो | मत्कुजो |

| पुट-संख्या | श्लोक-संख्या | शुद्धपाठः | अशुद्धपाठः |
|---|---|---|---|
| 139 | 13 | वर्ध | वर्ध |
| 140 | 20 | षष्ठ | षष्ट |
| 145 | 17 | पलं | पनं |
| 148 | 6 | महीभुजा | महीभुजाः |
| 158 | 6 | मोदकाः | मोदका |
| 163 | 6 | कल्प | कन्प |
| 175 | 23 | व्याधि | व्याधि |
| 179 | 19 | क्रिमिभि | क्रिमिमि |
| 180 | 27 | क्रिमि | क्तिमि |
| 185 | 63 | गोधूम | गोधमस |
| 186 | 74 | पद्म | पह्म |
| 190 | 19 | ग्रहिणी | ग्राहिणी |
| 190 | 22 | पर्युषितं | पर्युषितं |
| 202 | 117 | विन्ध्या | विद्या |
| 204 | 128 | लशुने | लशुसे |
| 208 | 5 | वंश | वश |
| 215 | 15 | विहित | विहिता |
| 223 | 6 | चतुर्विंश | चतुर्विंश |

| பக்கம் | வரி | சுத்தபாடம் | அசுத்தபாடம் |
|---|---|---|---|
| 127 | 14 | பீர்க்கு | பீக்கு |
| 128 | 5 | गजकर्णिका மலையருகு, மெருகன் கிழங்கு | गजकर्णिका மலையருகு |
| 128 | 14 | कुण्डलिका ஆனை வணங்கி, முட்சங்கன் | कूण्डलिका ஆனைவணங்கி |
| 130 | 5 | मधूलिका | निधूलिका |
| 131 | 19 | वाराही கோரைக் கிழங்கு, நிலைப்பனைக் கிழங்கு | वाराहि கோரைக்கிழங்கு |

